REG: NO. M. 1823. KUMARAN WEEKLY. TELEPHONE டெலிபோன் 40

சந்தா விவரம்.

உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
ஸிலோன், ரூ. 6-0-0
பர்மா, மலாய் முதலிய வெளிநாடு ஒரு 1-க்கு ரூ. 7-0-0

# குமரன்

விளம்பரம்.

நோட்டீஸ், கோர்ட் விளம்பரம் முதலியவைகளுக்கு இஞ்சு ஒன்றுக்கு ரூ .2-0-0
வியாபார சம்பந்தமானது ரூ. 0-12-0
ஒப்பந்த விளம்பரத்துக்கு மானேஜருக் கெழுதவும்.

வியாழன்தோறும் வெளிவரும் மாதப் பதிப்பும் சேர்ந்தது. PUBLISHED EVERY THURSDAY.

ஆரம் 16. காரைக்குடி, வெகுதானிய-ஹு ஆவணி-மீ 16-உ (1—9—38) முத்து 3

## தமிழ்த் தென்றல்

### சீட்டுக் கவி

மனிதர் ஒருவரை யொருவர் புதிதாகச் சந்திக்கும் போது தங்களை இன்னர் என்று அறிமுகப்படுத்திக் கொள்வது ஒரு முக்கியமான விஷயமாக இருக்கிறது. முன்பின் அறியாத ஒருவர் மற்றெருவரைச் சந்தித்தால் எப்படிப் பேசுவது என்ன பேசுவது என்பது பெரிய விஷயமாகி விடும். எவ்வளவு பெரிய புத்திமானும் எத்தனை பெரிய பேச்சாளியும் திகைத்துப் போக நேரிடுவது இயல்பு. இடையில் ஒருவர் இருந்து இவர் இன்னர்; இவருடைய தன்மை இது என்று எடுத்துக் கூறினல் அதன் பிறகு புதிய இருவர் அளவளாவிப் பேச வசதி யேற்படுவதைக் காணலாம் இம்முறையை மேல்நாட்டார் மிகுதியும் கொண்டாடுகின்றனர். ஆனல் நமது முன்னேர் இந்த விஷயத்தை நன்குணர்ந்திருந்தனர்.

* * *

இடையில் யாரும் இல்லாத காலத்தில் பெரிய மனிதரையோ அரசர்களையோ சந்திக்க வேண்டிய சந்தர்ப்பம் தமிழ்ப் புலவர்கட்கு ஏற்பட்டது. தமிழ்ப்புலவர்கள் இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் வெளியிலிருந்த படியே அரசர்க்கும் செல்வர்கட்கும் அறிவாளிகட்கும் சீட்டுக் கவிகளை எழுதியனுப்புவது வழக்கம். இக்கவிகள் மிகுந்த திறமையுடனும் கம்பீரமாகவும் இயற்றப்படும். இதில் புலவனது பெருமையும் தெள்ளிதின் விளக்கிக் கூறப்பட்டிருக்கும். தம்மைப் புகழ்ந்து கொள்தல் தகாதென்று கூறிய இலக்கண நூலார், தன்னை அறியாதவரிடத்தில் அவர் அறியும் பொருட்டு தம் புகழைத் தாமே கூறிக்கொள்ளலாம் என்று விலக்கு விதித்துள்ளார்.

* * *

இம்மாதிரியான சீட்டுக் கவிகள் எழுதுவதில் மிகவும் சிறந்து நின்ற அஷ்டாவதானி சரவணப் பெருமாட் கவிராயர் கூறும் செய்யுள் வருமாறு:—

கல்விச் சமுத்திரம் கமலாலயந் தமிழ்க்
கடன்மடை திறந்த வெள்ளம்
கற்பனை பிறப்பிடம் கலைமகள் இருப்பிடம்
கவிமாரி பொழியு மேகம்
சொல்விற் பனம்விளையும் மதுரக்
களஞ்சியம் தோன்று கற்பூர தீபம்
சுகிர்தகுண அவதானி சரவணப்
பெருமாள்கை
தொட்டெழுதி விட்ட சனது,
வில்லுக் கருச்சுனன் சொல்லுக்
கரிச்சந்த்ரன்
வெற்றிக்கு விக்ர மார்க்கன்
வித்தைக் ககத்தியன் முத்துக் கறுப்பண
விதட்சண னெதிர்ந்து காண்க!
மல்வெற்றி யாயென்று தாயென்று
நீயென்று மாலென்று வேலென்று கா
மாவென்று காவென்று நாவொன்று
பாவொன்று
வருகின்ற தருள் புரிவையே,

இந்தக் கவியில் புலவர் தமது பிரதாபங்களை விளக்கிக் கூறுகிருர். பின்னர் பாடல் பெறும் பிரபுவின் சிறப்பைக் கூறுகிருர். அப்பால் தாம் அனுப்பியுள்ள செய்யுளைப்பற்றிச் சிலவார்த்தை. அதன்பிறகு தனது விருப்பம் உரைக்கப்படுகிறது. இக்கவி காரைக்குடியிலுள்ள முத்துக்கறுப்பன் செட்டியாருக்கு எழுதியதாகச் சொல்லப்படுகிறது. வில்லவரின் முதலாவதாக விளங்கிய அருச்சுனன், சத்தியத்திற்குத் தலைசிறந்தவனான அரிச்சந்திரன், வித்தையின் கரைகண்ட அகத்தியன் ஆகியவர்களைப் போல் சிறந்த முத்துக் கறுப்பணன் என்று புகழ்ந்து கூறுகின்ருர்.

* * *

மிகுந்த வெற்றியை உடையவனே என்றும், என்றும் நீயே தாயென்றும், திருமாலையும் முருகனையும் மன்மதனையும் ஒத்தவனே என்றும், கற்பகதருப் போல் உதவுபவனே என்றும் (குறிப்பிட்டு) நாவிலே ஒன்றி எழுந்த பாட்டொன்று வருகிறது என்று கவிஞர் குறிப்பிடுகின்ருரென்பது படித்தின்புறத் தக்கதாகும்.



இதே புலவர், யாழ்ப்பாணத்திற்குச் சென்றபோது வைத்திலிங்கன் எனும் பிரபுவுக்கு ஒரு சீட்டுக்கவி யெழுதி யனுப்புகிருர். அது வருமாறு:—

செயராம நாதனே தெய்வந் தனுக்கோடி
தீர்த்தமே தீர்த்த மெங்கள்
சேதுபதி யேராஜ னெனவணங்
கார்களைச் சீறிவா யைக்கிழித்துச்
செள்ளையை நொறுக்கிவளர் பல்லையு
முடைத்துச்செழுங் குடரையும்
[பிடுங்கிச்
சிரசையு மறுத்துக்ர முகவிருது பெறுவிஜய
சிங்கடா கைப்பிரசண்டன்
நயமதுர மறியாத மூழமடையர்
செவியென்னு நல்லபாம்புப் புற்றிலே
நளினத் திருந்தமிழ்ச் செந்தேன் குழம்பை
யொரு நாளுங் கவித்திடாதோன்
நாவலந் தீவினுள நாடெலாம் புகழ்பெறு
நராதிபர் வணங்குதுல்யன்
நாவலர் குழாம்பல துதிக்குமட் டாவதா
னப்ரபவ சார்வபூமன்
இயலா யிரங்கோடி பிரபந்த முழுதுமொ
ரிமைப்பொழுதி னிற்பாடுவோன்
இலக்கண சமுத்திரஞ் சோமசுந்
தரகுருவெண யனடி மைக்குமடிமை
ஏகசக் ராதிபதி சரவணப் பெருமாட்க
வீச்சுரன் செங்கையோலை
இந்த்ரதரு யாழ்ப்பாண மேவிய வயித்யலிங்
கேந்த்ரனெதிர் கொண்டுகாண்க
வயமான கையிலே மூக்குள்ள
தொன்றுதிரு மாயன் பிறப்பிலொன்று
வாற்புறமோர் கொம்புந் தலைப்புறமோர்
கொம்புமுளவாகனந் தன்னிலொன்று
வலியார் புரங்களைச் சுடுகின்ற பொரு
ளொன்று வாரமது தன்னிலொன்று
வரவுடன் வெளுத்தசந் திரனென்று
நீயின்ன
வரிசைதந் தருள்புரிவையே.

இது மிகவும் கவனிக்கத்தக்கதொரு செய்யுளாகும். இப்புலவரை ஆதரித்து வந்த இராமநாதபுரம் சமஸ்தானத்திலும் இராமநாத ஸ்வாமி யிடத்தும் இவர் கொண்டிருந்த உறைப்பு முதலடியில் சீறி நிற்கிறது. இரண்டாம் அடியில் "நய மதுர மறியாதவர் காதில் என்னுடைய நளினத் திருந்தமிழ்ச் செந்தேன் குழம்பை ஒருநாளும் புகவிட மாட்டேன்" என்று கூறுவது பெரிதும் நோக்கத் தக்கதன்ரே? தமிழின் சுவையை உணரமுடியாத அசடுகளின் காதில் தேனூகிய செந்தமிழ் புகவும் சகியேன் என்று கூறுவதோடு, தமிழ் மாந்தாத செவி ஒரு நல்லபாம்புப் புற்ருகும் என்று தம்முடைய ஆத்திரத்தையும் வெளியிடுகின்ருர்.

* * *

இனி பிரபு என்னென்ன வரிசை தமக்கனுப்ப வேண்டு மென்பதற்கு ஒரு பட்டியல் தருகிருர். அது "வயமான கையிலே" என்று ஆரம்பிக்கும் நான்காவதடியில் தொடங்குகிறது. கையிலே மூக்குள்ளது—யானை. மாயன் பிறப்பில் ஒன்று—குதிரை. வால்புறமும் தலைப்புறமும் கொம்புள்ள வாகனம்—பல்லக்கு. வலியார் புரங்களைச்

(2-ம் பக்கம் பார்க்க)

## சினிமாச் செய்திகள்

**சரித்திரப் படம்**

சேலம் சங்கர் பிலிம்ஸார் தங்கள் அடுத்த படத்திற்கு ஒரு சரித்திரக் கதையைத் தெரிந்தெடுத்திருக்கிறார்களாம்.

O

**திருநீலகண்ட நாயனர்**

கூடியவிரைவில் இப்படத்தின் ஷூட்டிங் நியூடோன் ஸ்டுடியோவில் ஆரம்பமாகும். நடிகர்கள் தேர்தல் முடிந்துவிட்டது.

O

**தியாக பூமி**

பாபநாசம் சிவன், பேபி சரோஜா, எஸ். டி. சுப்புலட்சுமி முதலியோர் நடிக்கும் 'தியாகபூமி'யின் ஷூட்டிங் ஆரம்பமாகிவிட்டது.

O

**தேவிகா**

தேவிகாராணி மேனாடுகளில் சுற்றுப் பிரயாணஞ் செய்யப் போகிறார். அவர் திரும்பி வருவதற்கு நீண்ட காலம் பிடிக்குமென்று தெரிகிறது.

O

**அலாவுதீன்**

அலாவுதீன் அற்புத விளக்கு என்ற கதையைத் தழுவி எழுதியுள்ள மாயா ஜோதி என்னும் கதையை டைரக்டர் பத்மநாபன் படம் பிடிக்கப்போகிறார். எம். எம். சிதம்பரநாதன்தான் கதாநாயகன்.

O

**புகழேந்திப் புலவர்**

நாயன்மார்களைப்போல புலவர்களையும் சினிமாத்திரைக்குக் கொண்டுவர முனைந்துவிட்டார்கள். டெக்கான் சினிடோன் கம்பெனியார் 'புகழேந்திப் புலவர்' கதையைப் படமாகத் தயாரிக்கிறார்கள்.

O

**செய்திப்படத் தியேட்டர்**

சார்லின் சாப்ளின் சினிமாத் துறையை விட்டு விலகிவிட்டாரோ என்று சந்தேகித்தார்கள். ஆனால், அப்படியொன்றும் பயப்படத்தேவையில்லை யென்று தெரிகிறது. ஹாலிவுட்டில் முதன்முதலாக, ஒரு செய்திப்படத் தியேட்டரைக் கட்டப்போகிறாராம்.

O

**இருவர் கைது**

சென்னை ராயப்பேட்டை ஹைரோடு 99ம் நெம்பர் வீட்டில் வசிக்கும் மீனுபாய் அம்மாள் என்பர், தம்முடைய மகளான ராஜாமணி அம்மாள் (15வயது) சினிமாப் படத்தில் எக்ஸ்ட்ரா நடிகையாக நடித்துக் கொண்டிருந்ததாகவும், சென்ற 17ந்தேதி புதன்கிழமை இரவு மீனாக்ஷி சுந்தரம்செட்டி விதாஷணி அம்மாள் ஆகிய இருவரும் மேற்படி பெண்ணை ஆசைகாட்டி அழைத்துச்சென்று மீனாக்ஷி சுந்தரம் செட்டி அவளிடம் துர்ச்செயல்கள் புரிந்ததாகவும், சென்னை நகரப் போலீஸ்—கிரைம் பிராஞ்சில் புகார் கொடுத்திருக்கிறார். திருவல்லிக்கேணி கோஷா ஆஸ்பத்திரியில் மேற்படி ராஜாமணி 19ந் தேதி வெள்ளிக்கிழமைமுதல் சிகிச்சை பெற்றுவருகிறார். மேற்படி மீனாக்ஷிசுந்தரஞ்செட்டி சென்னை மஹாலெக்ஷ்மி ஸ்டுடியோவில் வேலையிருப்பவர் என்று சொல்லப்படுகிறது. இது சம்பந்தமாக ராஜூ முதலி என்பவரும், விதாஷணி அம்மாளும், மீனாக்ஷிசுந்தரம் செட்டியும் கைது செய்யப்பட்டு பந்தோபஸ்தில் வைக்கப்பட்டுள்ளனர்.

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

சுடுவது—தீவட்டி. வாரத்தில் ஒன்று—வெள்ளி (ரூபாய்). வெளுத்த சந்திரன்—சலவை வேட்டி. இத்தனையும் வேண்டும் என்று கேட்டிருக்கிறார். இதிலென்ன ரசமென்றால், புலவர் தம்மைத் தவிர அலங்கார சாமான் அத்தனைக்கும் பஞ்சப்பட்டுப்போயிருக்கிறார். கட்டிக்கொள்ள சலவை வேட்டிக்குக் கூட வழியில்லை. இப்படிப்பட்ட தரித்திரத்தால் பீடிக்கப்பட்டிருந்தாலும் புலமைமனம், படிப்பின் ஆற்றல் எவ்வளவு உரமான மனப்பான்மையை அளித்திருக்கிறதென்பது கவனிக்கத்தக்கதாகும். S. M.

## சென்னை ரேடியோ

(ஸெப்டம்பர் 1உ முதல் 7உ வரை)

**செப்டம்பர் 1உ வியாழன்**

மாலை 5-30 ஸ்ரீமதி அலமேலு ஜெயராமய்யர் வாய்ப்பாட்டு.
இரவு 7-30 குன்னக்குடி ஸ்ரீ வெங்கட்ராம ஐயர் வாய்ப்பாட்டு.
„ 8-25 அ. இ. ரே. கர்நாடக வாத்தியக் கோஷ்டி மாயாமாளவ கௌளம்
„ 8-30 குன்னக்குடி ஸ்ரீ வெங்கட்ராம் ஐயர் வாய்ப்பாட்டு.
„ 9-30 "நீர்ப்பாசனம்" என்ற விஷயம் பற்றி கனம் மந்திரி யாகூப் ஹாசன் ஆங்கிலத்தில் பேசுவார்.
„ 9-45 ஐரோப்பிய சங்கீதம்.

★

**2உ வெள்ளி**

மாலை 5-30 ஸ்ரீமதி ஆர். லக்ஷ்மி அம்மா வாய்ப்பாட்டு.
„ 6 அ. இ. ரே. வாத்தியக் கோஷ்டி ஷண்முகப் பிரியா.
„ 6-10 ஸ்ரீ தாமோதராச்சாரி வாய்ப்பாட்டு.
இரவு 7-15 "சினிமாவின் செல்வாக்கு" என்ற விஷயம் பற்றி ஸ்ரீ என். ராமரத்னம் தமிழில் பேசுவார்.
„ 7-30 ஸ்ரீ தாமோதராச்சாரி வாய்ப்பாட்டு.
„ 8-20 அ. இ. ரே. வித்வான்: புல்லாங்குழல் முகாரி.
„ 8-30 "மாயப் பிரபஞ்சம்" தமிழில் ஒரு சமூக நாடகம். நடத்துபவர்கள்: அ. இ. ரே. நடிகர்கள்.
„ 9-30 "நாடகக் கலையில் நவீன முறைகள்" என்ற விஷயம் பற்றி மிஸ்டர் அலெக்ஸ் எல்மோர் ஆங்கிலத்தில் பேசுவார்.
„ 9-45 ஷெரீப் அலிகான் வாய்ப்பாட்டு.

★

**3உ சனி**

மாலை 5-30 ஸ்ரீ எஸ். எஸ். மணி பாகவதர் வாய்ப்பாட்டு.
„ 6-10 அ. இ. ரே. வாத்தியக் கோஷ்டி நடபைரவி.
„ 6-20 மன்னார்குடி ஸ்ரீ விஸ்வநாத ஐயர் வாய்ப்பாட்டு.
இரவு 7-30 ஸ்ரீ எம். சாமிநாத ஐயர் பாட்டு.
„ 9-30 சில புதிய புஸ்தகங்கள் மிஸ்டர் பார் பாரா செஸ்டர்.
„ 9-45 ஐரோப்பிய சங்கீதம்.

★

**4உ ஞாயிறு**

மாலை 5-30 ஸ்ரீமதி ஜி. சென்னம்மா வாய்ப்பாட்டு.
மாலை 6-30 அ. இ. ரே. வாத்தியக் கோஷ்டி இந்தோளம்.
„ 6-40 ஸ்ரீமதி ஜி. சென்னம்மா பாட்டு.
இரவு 7-30 மதுரை சகோதரர்கள் வாய்ப்பாட்டு.
„ 9-30 விளையாட்டுகளைப் பற்றி மிஸ்டர் ஆர். டி. டெனிஸ்டன் ஆங்கிலத்தில் பேசுவார்.
„ 9-45 பாலையூர் ஸ்ரீ கே. வெங்கடராம ஐயர், தீக்ஷதர் கீர்த்தனங்கள்.

★

**5உ திங்கள்**

மாலை 5-30 அ. இ. ரே. வித்வான் பதினாறு தந்தியில் பிடில் கச்சேரி.
„ 6-10 ஸ்ரீமதி டி. என். மாணிக்கம் வாய்ப்பாட்டு
இரவு 7-15 "தமிழ் அகராதி தொகுத்த விதம்" என்ற விஷயம் பற்றி ராவ்சாகிப் ஸ்ரீ எஸ். வையாபுரிப் பிள்ளை தமிழில் பேசுவார்.
„ 7-30 ஸ்ரீமதி டி. என் மாணிக்கம் வாய்ப்பாட்டு.
„ 8-35 அ. இ. ரே. வாத்தியக் கோஷ்டி ராம்ப்ரியா.
„ 8-35 ஸ்ரீ கோபாலசாமி செட்டி வாய்ப்பாட்டு.
„ 9-30 "மூன்று கொடிகளின் கீழிருந்து வந்த மதராஸ்" என்ற விஷயம் பற்றி சென்னை நகர் ஆர்ச் பிஷப் ஆங்கிலத்தில் பேசுவார்.
„ 9-45 ஸ்ரீ கோபாலசாமி செட்டியார் வாய்ப்பாட்டு.

★

**6உ சேவ்வாய்**

மாலை 5-30 ஸ்ரீ கே. ராதாகிருஷ்ண பிள்ளை (ஸ்ரீ அழகநம்பியா பிள்ளை குமாரர்) வாய்ப்பாட்டு.
„ 6-15 அ. இ. ரே. வாத்தியக் கோஷ்டி லளிதா.
„ 6-25 ஸ்ரீ கே. ஏ. ராதாகிருஷ்ண பிள்ளை பாட்டு.
இரவு 7-30 மாயவரம் ஸ்ரீமதி டி. ஏ. சுந்தராம்பாள் வாய்ப்பாட்டு.
„ 8-25 அ. இ. ரே. வித்வான்: வீணை தர்பார்.
„ 8-35 டி. ஏ. சுந்தராம்பாள் பாட்டு.
„ 9-30 "பழமொழிகள்" என்ற விஷயம் பற்றி ஹெச். வி. பேப்ஓர்த் ஆங்கிலத்தில் பேசுவார்.
„ 9-45 ஐரோப்பிய சங்கீதம்.

★

**7உ புதன்**

மாலை 5-30 ஸ்ரீ சுப்ரமண்ய தீக்ஷதர் (ஹார்மோனியம்)
„ 6-15 ஸ்ரீ ஆர். சுப்ரமண்ய ஐயர் (மதுரை மணிஐயர்) வாய்ப்பாட்டு.
இரவு 7-15 "பேசும் படத்தில் சம்பாஷணை" என்ற விஷயம் பற்றி ஸ்ரீ வ. ராமசாமி தமிழில் பேசுவார்.
„ 7-30 ஸ்ரீ ஆர். சுப்ரமண்ய ஐயர் (வாய்பாட்டு)
„ 8-15 ஸ்ரீ சுப்பிரமண்ய தீக்ஷதர்
„ 8-40 ஸ்ரீமதி கோதைநாயகி அம்மாள் வாய்ப்பாட்டு.
„ 9-30 "ஸூயஸுக்குக் கிழக்கே" என்ற விஷயம் பற்றி ஸ்ரீ ஜி. பார்த்தசாரதி ஆங்கிலத்தில் பேசுவார்.
„ 9-45 மாஸ்டர் ரங்காராஜன் வாய்ப்பாட்டு.

[குறிப்பு: தினமும் இரவு 9-15 க்கு வர்த்தமானமும் வானிலை அறிக்கையும். இரவு 10-30 க்கு நிகழ்ச்சிகள் முடிவடையும்.]



## மணமகன் தேவை.

1. விஸ்வ பிராமண வகுப்பு. வயது சுமார் 21. சொற்பமான தமிழ் படிப்பு. விஸ்வகர்ம வகுப்பில் மாதம் 40 ரூபாய்க்கு குறையாத வரும்படியுள்ள மணமகன் தேவை.

2. வேளாள வகுப்பு. வயது 18. தமிழ்ப் படிப்பு, சங்கீதப் பயிற்சி. தையல், பூவேலை, கை ராட்டினநூல் நூற்றல் முதலிய கைத்தொழில் பயிற்சி உண்டு. உயர்ஜாதி ஹிந்து வகுப்பில் தகுந்த செல்வ நிலையுள்ள மணமகன் தேவை.

காரியதரிசி,
**மாதர் மறுமண சகாய சங்கம்,**
காரைக்குடி.

## உலகில் மிகப் பழைய பத்திரிகை

**1500 வருஷத்துக்கு முன் ஆரம்பம்**

உலகிலேயே மிகப்பழைய பத்திரிகை பீப்பிங் பால் என்ற சீனதேசப் பத்திரிகைதானாம். கி. பி. 400-ம் ஆண்டு ஸௌ—சங் என்பவரால் ஆரம்பிக்கப்பட்டது. கடைசிவரை மர எழுத்துகளாலேயே அச்சிட்டு வெளியிடப்பட்டு வந்தது. இதன் வாழ்க்கையில் ஆயிரம் ஆசிரியர்களை இழந்திருக்கின்றது; இவர்களில் பெரும்பாலோர் சிரச்சேதஞ் செய்யப்பட்டனர். ஜப்பானியர் பீக்கிங்கைக் கைப்பற்றியதும் இந்தப்பத்திரிகைக்குத் தடைவிதித்தார்கள். பின்னர், தடை நீங்கி பத்திரிகை வெளிவந்தது. ஆனால், பத்திரிகை தனது கொள்கையிலிருந்து சிறிதும் பிறழாததால், மீண்டும் அதற்குத் துன்பம் வந்தது. இப்பொழுது, தலைதூக்க முடியாதபடி கீழே படுக்க வைத்துவிட்டார்கள் ஜப்பானியர்.

## சேவாசமிதி கமிஷனர் விஜயம்

(ஒரு நிருபர்)

ஸேவாசமிதி சீப்ஆர்கனைஸிங் கமிஷனர் பண்டித ஸ்ரீராம் பாஜ்பாய் அவர்களும் சென்னை மாகாண ஆர்கனைஸிங் கமிஷனர் ஸ்ரீ எஸ். ஆர். வெங்கட்ராமன் அவர்களும் அடியில்கண்ட விவரப்படி மதுரை, இராமநாதபுரம் திருநெல்வேலி ஜில்லாக்களில் சுற்றுப்பிரயாணம் செய்வார்கள்.—

2—9—38 முதல் 4—9—38 வரை மதுரை.
5—9—38 „ சாத்தூரும் திருநெல்வேலியும்,
6—9—38 „ திருநெல்வேலி.
8—9—38 முதல் } காரைக்குடியும்
10—9—38 வரை } செட்டிநாடும்

10—9—38 மாலை மதுரை வந்து ஸௌராஷ்ட்ர உயர்தரக் கலாசாலை பழைய மாணவர் சங்கத்தின் ஆண்டுவிழாவிற்கு பண்டித ஸ்ரீராம் பாஜ்பாய் தலைமை வகிப்பார்.



# பாகனேரியில் ஆண்டு விழா

## திரு டி. கே. சிதம்பரநாத முதலியார் தலைமை

(நமது நிருபர்)

ஆவணி-மீ 8-உ 24—8—38 அன்று பாகனேரி தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கத்தின் ஆண்டுவிழா பெருமாள் கோயிலுக்கு முன் அமைக்கப்பட்டிருந்த அலங்காரக் கொட்டகையில் நடைபெற்றது. கொட்டகையில் தமிழ் வளர்ச்சிக்காக தொண்டாற்றிவரும் பல பெரியார்களின் புகைப்படங்கள் மாட்டப்பட்டிருந்தன.

ஆண்டுவிழாத் தலைவர் திருவாளர் டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்களை

திரு. டி. கே. சிதம்பரநாத முதலியார்.

யும், மற்ற பிரசங்கியார்களையும் உள்ளூர் பிரமுகர்களும் வெளியூர் அன்பர்களும் ஏராளமாகப் புடைசூழ மேளவாத்தியத்துடன் ஆண்டுவிழாக் கொட்டகைக்கு ஊர்வலமாக அழைத்து வந்தார்கள். தலைவர் ஆசனத்தே அமர்ந்தார். மாணவிகள் இறைவணக்கம் பாடினர். திரு. வெ. பெரி. பழ. மு. காசி விஸ்வநாதன் செட்டியாரவர்கள் தலைவருக்கு வரவேற்புத்தாள் வாசித்தளித்தார்கள். சங்கத்தின் தலைவர் அறிக்கையைப் படித்தார். தலைவரவர்கள் திருவள்ளுவர் நூல் நிலயத்தைத் திறந்துதவிய திரு. காசிச் செட்டியாரவர்களைப் பாராட்டியும், சங்கம் நீண்டகாலம் வாழ வேண்டுமென் வாழ்த்தியும் மேலும் பேசினதாவது:—

சங்க அங்கத்தினர்கட்கும் வந்திருக்கும் அன்பர்கட்கும் என்து வந்தனத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். தமிழ் மக்களாகிய நாம் தமிழ்த்தாயை வழிபடுவதற்கு இங்கே கூடியிருக்கிறோமென நான் கருதுகிறேன்.

திருநெல்வேலிக்கு அருகிலுள்ள வண்ணாரப்பேட்டை என்ற சிறிய ஊரில் நான் வசிக்கிறேன். அங்கு ஞாயிற்றுக்கிழமை தோறும் பல அன்பர்கள் கூடுவதுண்டு. தமிழாராய்ச்சி செய்வோம். இப்பொழுது எனக்களிக்கப்பட்ட வரவேற்புத் தாளில் நான் தமிழுக்காகத் தொண்டாற்றுவது பற்றி குறிப்பிட்டிருந்தீர்கள். நீங்கள் இவ்வளவுதாரம் என்னைப்பற்றி கூறியிருப்பதெல்லாம் உங்கட்கு தமிழின் மீதிருக்கும் ஆர்வத்தையே காட்டுகிறது.

* * *

தமிழ் மகா புனிதமானது. அதை நம்முடைய பழைய நூல்களில் காணலாம். சிவபெருமானே தந்தது என்று சொல்வார்கள். இதற்கென்ன அர்த்தம்? அறிவியான பாஷை என்று பொருள். இதுபற்றி ஒரு ஐயம் நிகழலாம். நான்கு வருடங்கட்கு முன் சென்னையில் நடந்த ஒரு விஷயத்தை உங்கட்கு கூற விரும்புகிறேன்.

* * *

சென்னை தியாசபிகல் சொஸைட்டியின் ஆண்டு விழாவில் தலைமைவகித்தேன். கடவுள் வாழ்த்து நடந்தது. இங்கிலீஷ், அராபிக், பிரஞ்சு, பெர்ஷியா அவ்வளவு பாஷையிலும் நடந்தது. ஆனால்—தமிழ்மட்டும் இல்லை. இது எங்கே தெரியுமா? சென்னையில்—தமிழ் நாட்டில் நடந்த கூட்டத்தில் என்பதை ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். அப்பொழுது நான், தமிழ்பாஷையில் வாழ்த்து இல்லாதது பற்றிய என் வருத்தத்தைத் தெரிவித்துக் கொண்டேன்.

* * *

மேடம் பிளாவட்ஸ்கி என்பவர் "தமிழ் நாட்டில் தான் ஆன்ம சம்பந்தமான பெரிய கிளர்ச்சி அதிகம். அதனால் தான் சங்கத்தை சென்னை அடையாற்றில் ஸ்தாபித்தேன்", என்று சொன்னார். அகஸ்தியர் புத்

தொன்பதாயிரம் வருடங்கட்கு முன் இருந்தவரென அவர்கள் கணக்கிட்டிருக்கிறார்கள். இதில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. கலைவளர்ந்தோங்குவதற்கு பல வருடங்கள் வேண்டும். கம்ப ராமாயணத்தை எடுத்துக் கொள்வோம். அது பல ஆயிரக்கணக்கான வருடங்களாக பூத்து காய்த்து பழுத்து இன்று தேனென இனிக்கிறது. திருக்குறள் 2000 வருடங்கட்கு முன் எழுதப்பட்டது. அதில் செய்யப்பட்டிருக்கும் 'நகாஸ்' வேலைகள் தான் எப்படி யிருக்கிறது! இவ்வளவு தூரம் கம்பனையும் திருவள்ளுவனையும் உண்டாக்கும் சக்தி தமிழுக்கு—கலைக்கு இருந்திருக்க வேண்டுமாயின் அது பத்தொன்பயிரம் வருடங்கட்கு முன்னரே யிருந்திருக்க வேண்டுமென்பதற்கு என்ன ஆக்ஷேபனை? ஒருகலை நன்றாக வளர்ந்தோங்க இதைவிட பல ஆயிரக்கணக்கான வருடங்கள் தேவையென்பதே என் அபிப்பிராயம்.

* * *

இழிவறிந் துண்பான்க
ணின்பம் போனிற்குங்
கழிபே ரிரையான்க ணோய்

அதிகமாக உணவருந்துதல் உடலுக்குக் கெடுதி. அதிகமாக உண்டால் தசைகளைத் தாக்கி மிக கெடுதலை உண்டாக்குகிறது என்பது தற்காலத்திய ஆராய்ச்சியின் முடிவு. அதனால் பட்டினி கிடந்து உயிரை விடவேண்டு மென்பதல்ல. குறைவாகச் சாப்பிடவேண்டும். இதைத் தான் குறளாசிரியர் கூறுகிறார். பெருந்தீனிக்காரனிடம் நோய்தான் குடிகொள்ளும். இந்தக் குறளில் 'நோய்' என்பது கடைசியில் வந்து நின்று "பார்த்துக்கொள்" என்று பயமுறுத்துவது போல் அமைந்திருக்கிறது. நோய் என்று செல்லும் பொழுது அதில் எவ்வளவு பாவம் இருக்கிறதென்று பாருங்கள்.

* * *

இப்படி பாவத்தோடு கவியமைப்பது எல்லாராலும் ஆகக் கூடிய காரியமா? தகப்பன் குழந்தையை மிக ஆவலோடு கொஞ்சுகின்றான். குழந்தை அதை உணருகிறதா? அது வீறிட்டலறுகிறது. கணவன் ஆபீசிலிருந்து வருகிறான். மனைவி, புத்தகத்தைப் படித்துக் கொண்டிருக்கிறாள். கணவனுடைய 'அலுப்பை' அவள் உணருகிறாளா என்ன? கணவன் கூப்பிட்டால் முறைத்துப் பார்க்கிறாள், புத்தகத்தில் செலுத்தப்பட்ட கவனம் அவ்வளவு. இதில் எவ்வளவு பாவம் அடங்கியிருக்கிறது பாருங்கள்.

* * *

பாவத்திற்கென்றே ஏற்பட்டது சங்கீதம். ஆனால் நம்முடைய பாகவதர்களிடம் பாவத்தைக் காண முடிவதில்லை. சங்கீதக் கலையில் பாவத்தைக் காட்டுவதை விட நாட்டியக்கலையில் காட்டுவது மிகவும் கஷ்டமான காரியம். அதைவிடக் கஷ்டம் கவிதையில் பாவம் காட்டுவது.

"முத்தொள்ளாயிரம்" என்பதுபற்றி யாராவது கேள்விப்பட்டிருக்கிறீர்களா? இதற்கீடான நூல் உலகத்திலேயே கிடையாதென்று சொல்லலாம். மூன்று மன்னர்களையும் பற்றி இரண்டாயிரத்து எழுநூறு கவிகள் எழுதப்பட்டன. இதில் சில பாட்டுகள் தான் அகப்பட்டிருக்கின்றன. பாவ உணர்ச்சி அப்படியே ததும்புகிறது. அப்படிப்பட்ட நூல் ஒன்று ஆங்கிலேயர்களுக்கு கிடைக்குமானால் இவர்கள் இதை எப்படி போற்றுவார்கள் என்று சொல்லவும் வேண்டுமோ?

* * *

அகஸ்தியரைப்பற்றி குறவஞ்சியில் "யானை பூசித்த நாயகர் குறுமுனிவன் தமிழை நேசித்த நாயகர்" என்று கூறினார். கம்பர் "என்று முள தென்றமிழ்" என்றார். இவ்வாறு தமிழ் உயர்ந்த நிலைக்கு வருவதற்கு பல ஆண்டுகள் வேண்டுமல்லவா? அவ்வளவு பூர்வமான பாஷை' அகஸ்தியர் நமக்கு பெரிய மேன்மையை அருளிச் செய்தார்; திரட்டிக் கொடுத்தார்; கம்பர் வந்தார்; அவ்வளவு நூல்களையும் பார்த்தார்; அதிலிருந்து இராமாயணத்தை நமக்கருளிச் செய்தார்.

* * *

பிறகு ஆங்கிலம் வந்தது. எல்லாவற்றையும் ஒரே வெளுப்பாக வெளு வெளு என்று வெளுத்துவாங்கி விட்டது. ரயிலைச் செய்தது ஆகாயக் கப்பலைச் செய்தது, இங்கிலீஷ் பாஷையென பறைசாற்றப்பட்டது. ஏற்றுக் கொண்டோர் பலர். சிறிது யோசித்துப் பாருங்கள். பாஷையா இதைச் செய்தது? அப்படியானால் இங்கிலீஷில் சொன்னால் மோட்டார்கார் டிரைவர் இல்லாமலே வருமா? நாமும் செய்யலாம். இன்னும் அநேக சாமான்களைச் செய்யலாம். ஆனால் விடமாட்டேன் என்கிறார்களே அவர்களுடைய காரைக் கொண்டுவந்து நம் மீது ஏற்றவேண்டுமல்லவா! அதற்காகத் தான். ஆனால் நம்முடைய பாஷையிலிருப்பது போன்று கவியற்ற ஒருவராலேயுமே முடியாது.

* * *

கார் செய்வது பிரமாதமான காரியமல்ல. நாளைக்கே செட்டிமார் நாட்டில் ஒரு தொழிற்சாலை ஏற்படுத்தலாம். பணமாயில்லை? ரோல்ஸ் ராய்ஸ் கார் செய்யலாம். ஐம்பதினாயிர ரூபாயல்ல, ஒரு கார் ஐநூறு ரூபாய்க்கு விற்கலாம்.

* * *

கடவுள் எங்கே யிருப்பார். இது பெரிய கேள்வியல்லவா? நாம் ஒரு காரியத்தை செய்யும் பொழுது முழு கவனத்தையும் அதனிடத்தில் செலுத்தவேண்டும்.

* * *

"ஓயாதே உள்குவார்
உள்ளிருக்கும் உள்ளானை
சேயானை சேவகனை
தென்னன் பெருந்துறையில்
மேயானை வேதியனை
மாதிருக்கும் பாதியனை"

"ஆட்கொண்ட நாயகனை
தாயான தத்துவனை தானே
உலகேழும் ஆயானை
பாடுதுங்காண் அம்மானாய்"

இதை நோக்கினால் கடவுள் எங்கே யிருக்கிறார் என்று தெரியும். கடவுள் கோயிலில் இருக்கிறார் என்றால் அது ஒரு பாவனை.

பாரதியாரும் நானும் ஒரே இடத்தில் வசித்தோம். ஒன்றாகப் படித்தோம். அவர் வடநாடு சென்றிருந்தார். அங்கே தமிழர்களே இல்லை. தமிழ் கேட்க வழி கிடையாது. ஒரு நாள் அவர் வீட்டு முன் ஒரு சன்யாசி—தமிழ் நாட்டான் காவடிச்சிந்து பாடுவதைக் கேட்டார். தமிழ்ப் பாட்டைக் கேட்டதும் அவருக்கு அளவற்ற மகிழ்ச்சி ஏற்பட்டு விட்டது. அந்த பாவத்தை அப்படியே ரசித்தார். அதிலிருந்து அவருக்கு உணர்ச்சி உண்டாயிற்று என்று அவரே பலமுறை என்னிடம் கூறியுள்ளார்.

* * *

பிற பாஷையைப் படித்தால்தான் தமிழை நன்றாக ரசிக்க முடியும் என்பதற்காகவே இந்த சம்பவத்தைக் கூறினேன். நிழலருமை வெய்யலில் நின்றவனுக்குத் தானே தெரியும். பாரதியார் பல பாஷைகளை அறிந்திருந்தார். அவரால் தமிழை நன்கு ரசிக்க முடிந்தது. பாவ உணர்ச்சியுள்ள பாட்டுகளை நமக்குத் தந்துதவினார்.

"செந்தமிழ் நாடென்னும் போதினிலே இன்பத் தேன்வந்து பாயுது காதினிலே" எப்படியிருக்கிறது. உண்மையிலேயே தேன் பாய்கிறதல்லவா? சில பண்டிதர்கள் பாரதி பாட்டில் இலக்கணமில்லை யென்பார்கள். 'பாயுது' என்பது இலக்கணப் பிழையல்லவா? ஒருவன் அடித்தால் தொல்காப்பியத்தை எடுத்து வைத்துக்கொண்டா அழுவது? அல்லது வசை பாடுவது? பாரதியார் தமிழையும் தமிழ் நாட்டையும் அனுபவித்தார். சந்தோஷத்தைச் சொல்லவந்த இடத்தில் இலக்கணமென்ன வேண்டியிருக்கிறது?

* * *

முதலில் இலக்கியம்; பின்பு இலக்கணம். இலக்கியத்தை வைத்துக்கொண்டு தான் இலக்கணம் எழுத வேண்டும். இலக்கணத்தை வைத்துக் கொண்டு இலக்கியம் சரியில்லையென்று சொல்வது தவறு. இலக்கணம் வேண்டுமானால் பாரதியையும் கம்பனையும் வைத்தல்லவோ எழுத வேண்டும். கம்பர், பாரதி, திருவாசகம் இவைகளில் இலக்கணத்தைத் தேய்த்து புத்தகத்தை கெடுத்துவிட வேண்டாமென்பதே என் அபிப்பிராயம்.

* * *

தென்னாப்பிரிக்காவில் ஹமேசான் நதி ஓடுகின்றது என்று மூன்றாவது பாரத்தில் படித்தால் அதுபற்றி நமக்கு ஏதாவது உணர்ச்சி உண்டாகிறதா?

"காவேரி தென் பெண்ணை பாலாறு" எப்படியிருக்கிறது? பாலில் விழுந்து நீச்சடித்திருக்கிறார் கவி. நமக்கும் அந்த உணர்ச்சியே உண்டாகிறது. ஆங்கிலத்தில் இப்படி பாவத்தோடு கூடிய கவி ஒரு வரி இருக்குமானால் அதைப்பற்றி நூறு பக்கம் எழுதி விடுவார்கள். பாரதியாரும் தேசிக விநாயகம் பிள்ளையும் பிறந்த இந்த சந்தர்ப்பத்தில் நாமும் பிறந்தது குறித்து மகிழ்ச்சியடைவோமாக.

அமராவதிபுதூர் ஸ்ரீ. பிச்சப்பா சுப்பிரமணியன் "பாரதியும் கவியும்" என்பதுபற்றிப் பேசுகையில் பாரதியின் பாக்களைப் பாடிக் காண்பித்து விளக்கிக் கூறி கேட்போருக்கு மிக உற்சாகத்தையுண்டுபண்ணக் கூடிய முறையில் பேசினார்கள்.

12 மணிக்கு போஜனத்திற்காக கூட்டம் கலைந்தது. வந்திருந்தோருக்கு சிறந்த விருந்தொன்று நடத்தப்பட்டது. பிற்பகல் சிற்றுண்டிக்குப் பின்னர் 4-30 மணிக்கு மீண்டும் கூட்டம் ஆரம்பமாகியது. ஆண்களும் பெண்களுமாக சுமார் 750 பேர்கள் கூடியிருந்தனர்.

வித்வான் அரு. சோமசுந்தரம் செட்டியார் "மாபெரும் புலவரும் உவமை நயமும்" என்பதுபற்றிப் பேசினார். அதன் பின்பு அண்ணாமலை பல்கலைக் கழக தமிழ் விரிவுரையாளர் ஸ்ரீ ந. மு. வேங்கடசாமி நாட்டார் "திருவள்ளுவர்" என்பதுபற்றி உபந்யசித்தார், 'ஆனந்த விகடன் ஆசிரியர்' ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி 'தமிழர் கலைகள்' என்பதுபற்றி சொற்பொழிவு நிகழ்த்தினார்.

ஆசிக்கடிதங்கள் அனுப்பியவரின் பெயர்கள் படிக்கப்பட்டன. தலைவரின் முடிவுரைக்குப் பின்னர், சங்க சாரணப் படைத் தலைவரும், சமீபத்தில் பர்மா செட்டியார்கள் சங்க அமைச்சராக நியமனம் ஆகியிருக்கிறவருமான ஸ்ரீ மாணிக்கம் பி. ஏ. அவர்களுக்கும் நன்றி கூற 10-30 மணிக்கு கூட்டம் இனிது நிறைவெய்தியது.



Bleed through.

# நன்றாகச் சமைக்கும் முறை

(H. C. மெங்கல், M. D.)

ஆகாரங்களைச் சரியாக சமைப்பதென்பது பரம முக்கியமான ஒரு விஷயம்; அது ஒரு அரிய பெரிய கலை. உணவுப் பொருட்களைச் சமைக்கும்பொழுது அவற்றில் இயற்கையாயுள்ள போஷணைத் திரவியங்கள் கெட்டும் விடலாம். கெடாமலும் இருக்கலாம். சத்து கெடாமல் சமைப்பது எப்படி? எப்படி சமைத்தால் சத்துக் கெட்டுவிடும்? ஆகார பதார்த்தங்களை மட்டுக்கு மிஞ்சி வேக வைப்பதும் சோடாவுப்புச் சேர்த்துச் சமைப்பதும் கெட்டது. அவற்றால், தேகாரோக்கியத்திற்கு இன்றியமையாத உயிர்ச்சத்தும் ஸி உயிர்ச்சத்தும் அழிந்து விடுகின்றன என்பதை எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். சமையலில் சோடாவுப்பு சேர்ப்பது எதற்குத் தெரியுமா? காய்கறிகளைச் சீக்கிரம் வேகப் பண்ணவும் அவைநிறம் கெடாமலிருக்கவுந்தான். சோடாவுப்பு காய்கறிகளினுடைய நிறத்தைக் கெடாமல் காத்துக் கொள்ளலாம்; ஆனால் அவற்றிலுள்ள உயிர்ச்சத்துக்கள் அனைத்தையும் அது அழித்துவிடுகிறது. ஆகையினால் சோடாவுப்புச் சேர்த்துச் சமைத்த ஆகாரங்கள் ஜீவ ஆகாரங்களாக இருப்பதற்குப் பதிலாக, செத்த ஆகாரங்களாக மாறிவிடுகின்றன.

இந்தியாவிலே அநேகமாய்க் காய்கறிகளை அதிகம் தண்ணீர் விட்டு வேவித்து பின்பு அந்தத் தண்ணீரைக் களைந்துவிடுகிறார்கள். இப்படிச் சமைக்கப்படும் காய்கறிகளும் சோறும் தங்களிடத்திலுள்ள உலோகச் சத்துக்களில் மிகப் பெரும் பாகத்தை இழந்து, சாரமற்ற சக்கைபோலாகி விடுகின்றன. சீறயம் (Calcium) இரும்பு, எரியேற்று (Phosphate) முதலிய உலோகங்களை இழந்த ஆகார பதார்த்தங்களைச் சாப்பிடுவதால் மோசமான வியாதிகள் உண்டாகும்.

ஆகார பதார்த்தங்களை மில்லில் அரைத்து சுத்தி செய்வதும் ஒரு கெடுதலான பழக்கம். அவைகளிலுள்ள சத்துக்கள் முழுவதுமோ அல்லது அரைபாதியாகவோ கெட்டுப்போகின்றன. வெள்ளைக் கோதுமை மா, மில்லரிசி முதலியவற்றின் விஷயத்தில் இது மிகப் பொருந்தும். அமெரிக்க ஐக்கிய மாகாண சர்க்காரின் விவசாய இலாகாவைச் சேர்ந்தவர்கள் இந்த விஷயத்தைக் குறித்துப் பின்வருமாறு சொல்லியிருக்கிறார்கள்: "விதைகளின் தோடு, தானிய தவசங்களின் தவிடு முதலியவைகளைப் போக்குவது அவைகளிலுள்ள உயிர்ச் சத்துக்களில் பெரும் பகுதியை வீணே போக்கிவிடுவதாகும். உண்மையைச் சொன்னால் தீட்டின அரிசியிலும் வெள்ளை மாவிலும் கொஞ்சமும் உயிர்ச் சத்துக்கள் இல்லை."

இனி தப்பிதமான சமையல் முறைகளினால் உணவுப் பொருட்களினுடைய சத்துக்கள் மட்டிலல்ல, அவைகளினுடைய ருசியும் கெட்டுப் போகிறது. தண்ணீர் அதிகம் விட்டுச் சமைத்து, பின்பு அந்தத் தண்ணீரைக் களைந்து விடுவதனால் காய்கறிகளிலுள்ள சுவைச் சத்துக்கள் அநேகமாக நஷ்டமாய் விடுகின்றன. 'பீ' உயிர்ச்சத்து வெகு இலேசாக ஜலத்தில் கரைந்து போய்விடக் கூடுமென்பதை நாம் மறந்துவிடக் கூடாது.

நமது சமையல் முறைகளிலேயுள்ள இன்னொரு குற்றத்தையும் சொல்லிவிட வேண்டும். அது என்னவென்றால், காய்கறி பயறு கடலை முதலியவைகளைத் தண்ணீரில் ஊற வைப்பது; இப்படி ஊறவைப்பதனால், அவைகளிலுள்ள புரதம், உலோகவுப்பு, உயிர்ச்சத்துக்களில் பாதிக்குமேலே கெட்டுவிடுகின்றன. சத்து கெடாதபடி சமைக்கவேண்டும். ஆவிகட்டி வேகவைப்பதால், வறட்டுதல் ஆகிய முறைகளில் பதார்த்தங்களினுடைய உயிர்ச் சத்துக்களாவது சுவைகளாவது கெடுவதில்லை. காய்கறி வேவதற்கு எந்த அளவு தண்ணீர் வேண்டுமோ சரியாய் அந்த அளவு தண்ணீர் தான் வைக்கவேண்டும். பயறு, உருளைக்கிழங்கு, சர்க்கரைவள்ளிக் கிழங்கு முதலியவைகளை அவிக்குந் தண்ணீரைக் கீழே கொட்டிவிடக்கூடாது; அந்தத் தண்ணீரைக் குழம்பு கூட்ட உபயோகிக்கலாம் அல்லது சும்மா குடிக்கலாம்.

காய்கறி அடுப்பில் வெந்துகொண்டிருக்கும்பொழுது கொஞ்சம் தண்ணீர் சேர்க்க வேண்டியிருக்குமானால், சுடு தண்ணீரைச் சேர். பச்சைத் தண்ணீர் வெந்துகொண்டிருக்கும் பதார்த்தங்களினுடைய ருசியையும் சத்தையும் கெடுத்துவிடும். புது உருளைக்கிழங்கு, காரெட், சர்க்கரைவள்ளிக் கிழங்கு முதலியவைகளின் தோலை மெதுவாகச் சுரண்டி யெடுக்கவேண்டும்; ஏனெனில், புரதமும் உலோகவுப்புக்களில் பெரும்பாகமும் காய்கறிகளின் தோலுக்கு அடுத்தாற்போலிருக்கின்றன. ஆகையால் தோலைச் சீவுகிறேனென்று சொல்லி, தோலை ஒட்டியுள்ள சத்துக்களையும் சீவிவிடக்கூடாது.

காய்கறிகளை நெய் அல்லது எண்ணெய் விட்டுத் தாளிதம் பண்ணுவதும் பொரிப்பதும் சுகத்திற்கு அடுத்ததல்ல. அந்த நெய் அல்லது எண்ணெயில் தோய்ந்த பதார்த்தங்களை ஜீரண ரஸங்கள் ஜீரணிப்பது சிரமம். இதனால் ஜீரணம் குந்தகப்பட்டு, வயிற்றிலுள்ள ஆகாரம் புளிப்புகொண்டு, தலையிடியும் ஆயாசமும் உண்டாகின்றன.

கடுகு, மிளகு, மிளகாய் முதலான காரச் சரக்குகள் குடலினுடைய சளிச் சவ்வுகளுக்கு அழற்சியை உண்டாக்குவதுமன்றி, ஆகாரங்களின் இயற்கை ருசியையும் கெடுத்து விடுவதால், அவைகளை நிராகரித்து விடுவதே உசிதம்.

---

ஹரிஜன முன்னேற்றங்கருதி, இந்தூர் சமஸ்தானத்தில் ஒவ்வொரு ஜில்லாவிலும் ஐந்து போர்டுகள் அமைக்கப் பட்டிருக்கின்றன.

---

சிறுவர்கள் வேலை சம்பந்தப்பட்ட சட்டத்தைப் பொறுத்து இந்தியா பெரும்பாலான ஐரோப்பிய நாடுகளைவிட முன்னுக்குச் சென்றுவிட்டது. பதினைந்து வயதுக்குக் குறைந்த யாரையும், சுரங்கத்திலோ அல்லது அதைச் சுற்றியோ வேலைக்கு வைத்துக்கொள்ளக் கூடாது என்று சட்டமியற்றப்பட்டிருக்கிறது. 17 வயதுக்குக் குறைந்த யாரையும், வைத்திய ஸர்டிபிகட் இல்லாமல் வேலைக்கு வைத்துக்கொள்ளக் கூடாது. இந்திய சட்டசபைகளில் நிறைவேறியுள்ள சட்டம் இவ்வாறு வரையறுத்துள்ளது.

---

இந்தியர் நிலைமையை விளக்கக்கூடிய போட்டோக்களைத் தமக்கு அனுப்பும்படி, காங்கிரஸ் அயல்நாட்டு இலாகாவைச் சேர்ந்த டாக்டர் ராம்மனோஹர் லோஹியா பத்திரிகைகளுக்கு ஒரு வேண்டுகோள் விடுத்திருக்கிறார். இந்தப் படங்கள், இந்தியாவைப்பற்றி நல்ல முறையில் அந்நிய நாடுகளில் பிரசாரஞ் செய்ய உதவும் என அவர் கருதுகிறார். இவ்விஷயத்துக்காக, இந்த இலாகாவில் ஒரு போட்டோ இலாகாவும் திறக்கப்போகிறார்கள்.







# ரோட்டரி கிளப்பில் அழகப்ப செட்டியார்

## மாமிச உணவை ஒழிப்பதே உலக சமாதானத்துக்கு வழி

### மரக்கறி உணவின் மகிமை

(நமது நிருபர்)

பினங்கு ரோட்டரிக் கிளப்பில் ஸ்ரீமான் க. வெ. ராம. அழகப்ப செட்டியாரவர்கள் சமீபத்தில் செய்த உபந்யாசத்தின் சாராம்சம் வருமாறு:—

புலால் உண்ணுமை ஓர் மதமல்ல; அதாவது ஓர் உயிரை வதைத்து உண்ணுதிருப்பதே. ஒரு மனிதன் நன்மையை தரத்தக்க ஆகாரத்தையே உட்கொள்ள வேண்டும். நன்மையைத் தரத்தக்கது என்றால் உடம்பைப் போஷிக்கிறது மாத்திரம் அல்லாமல் மனதையும் சந்தோஷப்படுத்தி நற்குணமும், அவயவங்களுக்கு சுறு சுறுப்புங் கொடுக்கக் கூடியதாயும் பசியையும் சக்தியையும் உண்டு பண்ணக்கூடியதாயும் இருக்கவேண்டும்.

இயற்கை மரக்கறிப் பொருள்கள், மருந்தாகவும் மனச்சாந்தியைக் கொடுக்கக்கூடியனவாகவும் இருக்கின்றன. அவைகள் சூரிய வெப்பம், பூமி, ஜலம் இவைகளிலிருந்து வளரும் சக்தியாகிய உப்பு சத்துகளை கிரகித்துக் கொள்கின்றன. மனிதன் தான் நேரே இவ் வளரும் சக்தியை அடைய முடியாது. ஆகையால் இச்சக்திகளை அடைந்த ஒரு பதார்த்தத்தை உட்கொள்ள வேண்டியதாக இருக்கிறது. ஆடு, மாடு முதலியவைகள் இலை, குழைகளைத் தின்றே அச் சக்தியை அடைந்திருக்கின்றன. நாம் இம்மிருகங்களை வதைத்து சாப்பிட்டு இச்சக்தியை அடைவதைக்காட்டிலும் ஏன் நேராக மரக்கறிகளையே தின்று அவ்வளர்ச்சியைப் பெறலாகாது?

பெர்னார்ட் ஷா, மகாத்மா காந்தி, ஹிட்லர் ஆகியவர்கள் மாமிசம் சாப்பிடுவதில்லை. இந்தியாவில் மாமிசமுண்ணாத பிராமணர்களே மிகுந்த அறிவுள்ள கோஷ்டியினராக இருக்கின்றனர்.

மாமிசம் உண்போன் அவன் வாழ்நாளில் ஐம்பது வருஷத்தில் இருபது மாடுகள் 80 ஆடுகள், 50 பன்றிகள் சாப்பிடுகின்றான்.

நோய்வாய்ப்பட்ட ஆட்டையோ, மிருகத்தையோ கொன்று தின்கின்ற மனிதர்களுக்கு உண்டாகும் நோய்கள் கணக்கில்லை. க்ஷயம், வாதம், புத்து, வகையரா நோய்களுக்கு இதுவே காரணமென்கின்றனர். மனிதர் அல்லாத பிற மிருகங்கள் நம்முடைய சௌகரிய வஸ்துக்கள் அல்ல, ஆனால் அவைகள் சகோதர பாவ முள்ளவைகள்.

ஏசுநாதர் "நீ, கொல்லாதே" என்று கற்பிக்குமிடத்தில் மனிதனை மாத்திரம் என்று பொருள் கொள்ளாமல் எவ்வுயிரையும் என்று பொருள் கொள்ள வேண்டும்.

எப்பொழுது மனிதன் ஏழையாகிய மிருகங்களை தன் ஆகாரத்துக்காகவோ, களியாட்டாவோ கொல்லுகின்றானோ, அவன் தன்னுடைய இனத்தாராகிய மனிதர்களையும் விரோதம் காரணமாக கொல்லப் பின்வாங்க மாட்டான். பிராணிகளைக் கொன்று தின்பது எப்படியிருக்கிற தென்றால் ஒரு பூனையானது தன் ஆகாரத்தை சாப்பிட்டுவிட்டு அடுத்த ஆகாரத்துக்காகத் தன்னுடைய நகங்களை கதவுத்தூணில் தீட்டிக் கொண்டு இருக்கிறதுபோலாகிறது. நீங்கள் முதலில் லேசாக ஆகாரத்துக்கு என்று மிருகங்களைக் கொல்லுகிறீர்கள். உங்களுடைய மனச்சாக்ஷி நீண்டு கொடுக்கிறது. பிறகு நீங்கள் எவ்விதமாகக் கொல்லுவதையும் நியாயமென மதிக்கிறீர்கள். உங்கள் உணர்ச்சி செத்துவிடுகிறது. நீங்கள் பிறகு சண்டை என்று சொல்லப்படும் யுத்தகளத்தில் மனிதரைக் கசாப்பாக அறுக்கும் நிலைமைக்கு வந்து விடுகிறீர்கள்.

நமக்கு இப்பொழுது யுத்தம் வேண்டாம் என்று பிரசங்கம் செய்வதில் யாதொரு பயனுமில்லை. அதற்கு மூல காரணமாகிய உயிரைக்கொன்று தின்னும் பழக்கத்தைவிட்டு அவைகளிடத்தில் அன்பு காட்ட முற்படுவோமானால் அது ஒரு பெரிய உலக மகாயுத்தங்களைத் தடுக்கும் சக்தியாகும். அஹிம்சா தர்மம் மேலோங்கும். யுத்தம் என்ற வார்த்தையே அகராதியில் இருக்கவேண்டிய அவசியம் இல்லாமல் செய்ய இயலும்.

இந்தியாவில் அஹிம்சா தர்மத்தை மேற்கொண்ட ரிஷிமுனிகள் போன்ற சிலர், அநேக பராக்கிரமமுள்ள காட்டு மிருகங்கள், விஷப் பாம்புகள், இவைகளைத்தங்கள் அன்பான நோக்கால் வசியப்படுத்தி சரண் அடையும்படி செய்கின்றனர். அவர்களிடத்தில் ததும்பும் அன்பு மேலிட்டினாலேயே சாத்தியமாகிறது. காய்கறி உணவு நிரம்பச் செட்டானதும், மேன்மையான உணவாகவும் இருக்கிறது.

---

நமக்குச் சுயேச்சை கிடைத்துவிட்டால் கலகமும் குழப்பமும் நடைபெறுதெனச் சொல்லுகிறார்கள். இது பகற்கனவு என்பதே என் அபிப்பிராயம். சுதந்தரப்போராட்டம் நடக்கையில் அஹிம்ஸா முறையை நாம் நன்குணராமையால் போலீஸ் உதவியையும் ராணுவ உதவியையும் நாடவேண்டியிருக்கிறது. காங்கிரஸ்காரர்களும் காரியக்கமிட்டியினரும் நாம் தவறியதற்கு காரணம் என்னவெனக்கேட்கவேண்டும். மந்திரிகளின் செய்கையை நாம் கண்டிப்பதாக நினைக்கவேண்டாம். பலாத்காரகுற்றங்கள் விஷயத்தில் சாத்வீகமான முறையில் பரிகாரம் தேட காங்கிரஸ் பூரணமாகத் தெரிந்து கொள்ளும் வரையில் மந்திரிகள் போலீஸ் உதவியை நாடவேண்டியதுதான் அவசியமிருந்தால் ராணுவத்தின் உதவியையும்நாடவேண்டும். பிறகு போலீஸ் உதவியையும் ராணுவ உதவியையும் நாடாமலிருக்கவேண்டும் அல்லது அந்த உதவியைக் குறைத்துக் கொள்ள வேண்டும். அதற்கான வழியை மந்திரிகள்செய்யாவிட்டால்அது தவறாகும். அதற்குவழியிருக்கிறது.காங்கிரஸ்ஸ்தாபனம் தற்சமயம் அந்த பெரிய காரியத்தைச் சாதிக்க முடியாத நிலையில் இருக்கலாம். அஹிம்ஸையில் பூரண நம்பிக்கையில்லாமல் போலீஸாரையும் ராணுவத்தையும் விலக்குவது என்பது முடியாத காரியம். காங்கிரஸ் வாதிகளிடையே கட்டுக்கடங்காத தன்மை அதிகமாக வருவதாகவும் சில விடங்களில் காங்கிரஸ்காரர்கள் பஹிரங்கமாக பலாத்காரத்திலு மிறங்குகிறார்கள் என்றும் புகார் வருகிறது. காங்கிரஸ்காரரில் பெரும்பாலோர் அந்த குறைக்கு ஆளாகமாட்டார்கள்என்றே நினைக்கிறேன்.

—மகாத்மா காந்தி.

---

க்ஷயரோகத்தடை நிதி

லேடி லின்லித்கோ திரட்டிவரும், சக்கிரவர்த்தி, க்ஷயரோகத் தடை நிதிக்கு ஆகஸ்டு 15உ முடிய வசூலான தொகை ரூ. 51,16,968.

## நேட்டாலில் இந்தியர்

நேட்டாலில் 1937ல் குடியேறிய இந்தியர் தொகை சுமார் 38000. இவருள் 27000 பேர் மாகாணங்களில் வேலைபார்த்துவந்தனர். பலர் தங்கள் சொந்த ஹோதாவில் விவசாயம் நடத்தினர். எனினும் டர்பனிலும் சுற்றியுள்ள பிரதேசங்களிலும் இந்தியரிடையே வேலையில்லாத் திண்டாட்டம் இருந்துகொண்டுதானிருக்கிறது.

வேலையிலிருப்பவர்களில் 6000 பேர் சர்க்கரைத் தொழிலிலும், கூட்டு ஸ்தாபனங்களிலும், வேலை பார்க்கின்றனர். வீட்டுவேலை, சில்லரை வேலைகளில் ஈடுபட்டுள்ளோர் தொகை 5650. தேயிலை, நிலக்கரி, ரயில்வேக்களில் 1750 பேர். சராசரி சம்பளம் மாதம் 42½ ஷிலிங் ஸ்டேட்டில் கொடுக்கப்படுகின்றது. உணவு இருப்பிட வசதி, வைத்தியம், மருந்து முதலியன இனமாக அளிக்கப்படுகின்றன.

1937, டிசம்பர் 31௨ நேட்டாலில் வசித்த இந்தியர் தொகை 171000. ஆடவர் 38000; பெண்கள் 28000.

### குடி வெறி

சென்னை மாகாணத்தில் 1937-ம் வருஷத்தில் குடி வெறிக்காகக் கைது செய்து தண்டித்த குற்றவாளிகளின் விபரம் வருமாறு:—

| | கைது செய்யப் பட்டவர். ஆண் | பெண் | தண்டிக்கப் பட்டவர். ஆண் | பெண் |
|---|---|---|---|---|
| நாட்டுப்புறம் | 12757 | 420 | 12659 | 509 |
| நகரப்புறம் | 3958 | 565 | 4837 | 377 |

### விவசாயத்துக்குப் பிரசாரம்

அமெரிக்காவில் மின்சார சக்தி உபயோகிப்பவர் தொகை 2 கோடி 70 லட்சம். இதில் 12 லட்சம் பேர் விவசாயத்துக்காக மின்சாரத்தை உபயோகிக்கின்றார்கள்.

## நோட்டீஸ்

### சிவகெங்கை டி. மு. கோர்ட்டு

1938௵ S. C. நீர் 214

A. S. மாணிக்கம் & கம்பெனி காரைக்குடி; பிராஞ்சு திருப்பத்தூர் ஷை கம்பேனி பார்ட்டனர்களிடம் பவர்பெற்ற ஏஜண்டு L. S. M. கோவிந்தசாமி பிள்ளை மூலம். } வாதி.

சிவகெங்கைத் தாலூகா பாகனேரியிலிருக்கும் கண்ணப்ப செட்டியார் குமாரன் கண. நாச்சியப்ப செட்டியார் என்ற சொக்கலிங்கம் செட்டியார் 1.
ஷையூரிலிருக்கும் சோமசுந்தரம் செட்டியார் குமாரன் சோம. சாத்தப்ப செட்டியார் 2. } பிரதிவாதிகள்.

வாதியின் கடையில் பிரதிவாதிகளின் கமலா ஸ்டோர் வியாபாரத்துக்காக பிரதிவாதிகள் மண் எண்ணை பத்துவரவு செய்ததில் பாக்கி ஏற்பட்ட ரூ 110 யையும் வட்டி சகிதம் வரப்பற்ற ஷை நிம்பரில் பிராது செய்து ஷை நிம்பரும் 24-9-38௨ வாயிதா ஏற்பட்டிருக்கிறது. ஷை வாயிதாவன்று ஷை கோர்ட்டில் பகல் 10 மணிக்கு பிரதிவாதிகள் ஆஜராகி தங்கள் எதிர்வாதங்களை தெரிவித்துக் கொள்ள வேண்டியது. தவறினால் வாதிக்கு ஒருதலை பக்ஷமாக தீர்ப்பாகி விடுமென்று அறியவும்.

சிவகெங்கை 25—8—38 } D. Srinivasan வாதி வக்கீல்

## 1937-ம் வருஷ போலீஸ் நிர்வாக அறிக்கை

### கொலை, கொள்ளைகளில் கோயம்புத்தூருக்கு முதல் ஸ்தானம்

1937ம் வருஷத்திய சென்னை போலீஸ் இலாகா நிர்வாக அறிக்கை வெளிவந்துள்ளது. விலைவாசி முந்திய வருடத்தைக் காட்டிலும் ஒருவிதத்திலும் விசேஷமில்லை. பல ஜில்லாக்களில் வேலையில்லா நெருக்கடி. சில ஜில்லாக்களில் பெருத்த மழைச் சேதம். பெல்லாரி பக்கத்தில் பஞ்சம். அனந்தப்பூர் பக்கத்தில் பிளேக். இருந்தபோதிலும் 1936 வருஷத்தைவிட 1937ல் மொத்தம் போலீஸ் குற்றச் சாட்டுகள் வெகுவாகக் குறைந்திருக்கின்றன.

கேஸ் எண்ணிக்கை வாரியாக சென்னை மாகாணத்தில் முதல் மூன்று ஸ்தானம் பெறும் ஜில்லாக்கள்

| கேசு விபரம் | முதலாவது | இரண்டாவது | மூன்றாவது |
|---|---|---|---|
| கொலை | 127 கோயம்புத்தூர் | 91 திருநெல்வேலி | 65 கர்நூல்; 67 ராமநாதபுரம் |
| கொள்ளை | 11 கோயம்புத்தூர் | 9 தென் கன்னடம் | 8 ராமநாதபுரம்; 8 திருநெல்வேலி |
| வழிப்பறி | 78 திருநெல்வேலி | 42 ராமநாதபுரம் | 33 மதுரை வடக்கு |
| வீடுதழைத்து களவு | 369 தஞ்சை | 836 சென்னை நகரம் | 287 தென் ஆற்காடு |
| சாதாரணத் திருட்டு | 1759 சென்னை நகரம் | 888 தென் ஆற்காடு | 796 கோயம்புத்தூர் |
| கால் நடைத் திருட்டு | 387 கோயம்புத்தூர் | 238 சேலம் | 228 மதுரை வடக்கு |

கொலைகள்:— 1936லும் 1937லும் நடந்த கொலைகள் பின் வருமாறு பிரித்துக் காட்டப்பட்டிருக்கின்றன.

| கொலைகளுக்கு காரணம் | 1936 | 1937 |
|---|---|---|
| ஸ்த்ரீ சம்பந்தமாக | 269 | 274 |
| குடும்ப சச்சரவு | 200 | 187 |
| கக்ஷிச்சண்டை | 106 | 155 |
| திருட்டு சம்பந்தம் | 93 | 92 |
| இதர காரணங்கள் | 407 | 348 |
| மொத்தம் | 1075 | 1056 |

ஸ்த்ரீ சம்பந்தமான கொலை சற்று அதிகம்; ஆனால் கக்ஷிச்சண்டை காரணமாக அரைமடங்கு அதிகமாயிருக்கிறது.

பிரஸ்தாப வருஷத்தில், 92 பேர் கொலை செய்துவிட்டு தாமும் தற்கொலை செய்திருக்கிறார்கள். கிருஷ்ண ஜில்லாவில், ரஜாவிலிருந்த ஒரு கான்ஸ்டபில், குடும்பச் சச்சரவு காரணமாக, தனது மனைவியையுங் கொன்றுவிட்டுத் தானுந் தற்கொலை செய்துகொண்டான். பொள்ளாச்சியில், ஒரு பிச்சைக்காரன் ஒரு சிறு முஸ்லிம் பெண்ணின் மூக்குத்தியைத் திருடுவதற்காக அப்பெண்ணைக் கொன்றுவிட்டான். அவனுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது.

கர்நூல் ஜில்லாவில், கட்சி பேதத்தால், ஒரு பெண்ணின் வீட்டுக்குத் தீ வைக்கப்பட்டது. வீட்டுக்குள்ளிருந்த 4 பெண்களும் 6 குழந்தைகளும் வெளியில் ஓடிவந்த பொழுது மூன்று பெண்களையும் ஐந்து குழந்தைகளையும் வெட்டிக் கொன்றனர். பிரதானக் குற்றவாளிக்குத் தூக்குத் தண்டனையும் மற்றவர்களுக்கு பலவித சிறைத்தண்டனையும் விதிக்கப்பட்டன.

#### வெடிகுண்டுகள்

எட்டுமுறை வெடிகுண்டு சம்பவங்கள் நிகழ்ந்தன. இவற்றின் பயனால் இருவர் மாண்டனர்; மூவர் காயமுற்றனர். நாலு கேசு கடப்பையிலும், ராமனாதபுரம் ஜில்லாவில் இரண்டும், கோயம்புத்தூர், சேலம் ஜில்லாக்களில் இரண்டும் நிகழ்ந்தன.

கள்ள நோட்டு கேஸ்கள்:— 1936ல் 7; 1937ல் 10. மூன்றில் தண்டனை விதிக்கப்பட்டது.

#### மோட்டார் விபத்துகளும், மரணங்களும்

1937ல் மோட்டார் விபத்துகளும் அதிகமாகி யிருக்கின்றன. டவுன்களை விட நாட்டுப்புறத்தில் அதிக விபத்துகள் ஏற்பட்டிருக்கின்றன.

| | டவுன்களில் மொத்த விபத்து | மரணம் | நாட்டுப்புறத்தில் மொத்த விபத்து | மரணம் |
|---|---|---|---|---|
| 1935 ல் | 359 | 45 | 428 | 147 |
| 1936 ல் | 366 | 37 | 683 | 195 |
| 1937 ல் | 425 | 40 | 955 | 236 |

1936-ல் இந்தியாவில் மாகாணவாரியாகவுள்ள போலீஸ் படையின் தொகை ஜனத் தொகை, மொத்த ஜனத் தொகைக்கும் போலீஸ் படைக்குமுள்ள விகிதாசாரம், போலீஸார் விசாரித்த கேஸ்கள் முதலியன சம்பந்தமான புள்ளி விவரங்கள் வருமாறு:—

| மாகாணம் | ஜனத்தொகை. | போலீஸ். படை | 1000 ஜனங்களுக்கு எத்தனை போலீஸார். | போலீஸார் விசாரித்த கேஸ்களின் மொத்தம். | போலீஸ்படையில் சராசரி ஒருவன் எத்தனை கேஸ்கள் விசாரித்தான் |
|---|---|---|---|---|---|
| ஐக்கிய மாகாணம் | 24,25,076 | 6,367 | 2·6 | 12,493 | 2·0 |
| பம்பாய் | 1,68,30,670 | 18,287 | 1·1 | 26,059 | 1·4 |
| பஞ்சாப் | 2,35,51,210 | 22,757 | 1·0 | 62,186 | 2·9 |
| ம. மாகாணம் | 1,53,23,000 | 11,533 | 0·8 | 53,116 | 2·5 |
| ஐ. மாகாணம் | 4,84,08,763 | 33,652 | 0·7 | 1,40,194 | 3·9 |
| சென்னை | 4,39,41,770 | 26,875 | 0·6 | 2,56,974 | 9·4 |
| வங்காளம் | 4,87,04,346 | 24,112 | 0·5 | 68,411 | 2·6 |
| அஸ்ஸாம் | 85,63,758 | 4,442 | 0·5 | 15,576 | 3·4 |
| பீஹார் | 3,23,71,434 | 12,316 | 0·4 | 41,882 | 3·0 |

மேலே குறிக்கப்பட்ட புள்ளி விவரங்களிலிருந்து இந்தியாவில், சென்னை மாகாணத்தில்தான் போலீஸ்படை தீவிரமாக புலன் விசாரிக்கும் வேலையைச் செய்கின்றனர் என்பது விளங்கும்.

## நடுத்தரக் கல்வி

1937 மார்ச 31௨ சென்னை மாகாணத்தில் இந்தியப் பையன்களுக்காக 521 ஸெகண்டரி பள்ளிக்கூடங்களிருந்தன. இவற்றில் 359 ஹைஸ்கூல்கள். மாணவர் தொகை 1,79,687. இந்தப் பள்ளிக்கூடங்களில்,

| | |
|---|---|
| பொது நிர்வாகத்தில் | 269 |
| தனி நிர்வாகத்தில் | 252 |

பொது நிர்வாகத்திலுள்ள பள்ளிக்கூடங்களில்.

| | |
|---|---|
| கவர்ன்மெண்டு நிர்வாகத்தில் | 14 |
| முனிஸிப்பல் ,, | 51 |
| ஜில்லா போர்டு ,, | 204 |

ஸ்கூல் பைனல் பரீட்சைக்கு 1937-ல் பீஸில்லாமல் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஷெட்யூல் வகுப்பு மாணவர்கள் தொகை 65.

### ரோடு மரணம்

ரோடுகளில், மோட்டார் முதலிய வாகனங்களால் ஏற்படும் மரண விகிதம் இந்தியாவில் அதிகரித்து வருகிறது.

பதினாயிரம் வாகனங்களுக்கு

| | | |
|---|---|---|
| பிரிட்டனில் | 29 | மரணங்களும் |
| இத்தாலியில் | 61 | ,, |
| ஹாலந்தில் | 50 | ,, |
| பெல்ஜியத்திலும் ஜர்மனியிலும் | 40 | ,, |
| இந்தியாவில் | 100 | ,, |

ஏற்படுவதாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது.

இந்தியாவில் மோட்டார் வாகனங்கள் மூலம் ஏற்படும் இந்த அபரிமிதமான மரண விகிதத்தைத் தடுக்க முயற்சிக்க வேண்டியது இந்தியா கவர்ன்மெண்டின் கடமையாகுமென்று லண்டன் 'நியூஸ் கிரானிக்கிள்' பத்திரிகை தனது தலையங்கத்தில் குறிப்பிட்டிருக்கிறது.

### ராணுவ சேவை

1937-ம் வருடம் இந்திய ராணுவ சேவைக்காக முன் வந்த விண்ணப்பதாரிகளின் எண்ணிக்கை 22843. இவரில் 8427 விண்ணப்பங்கள் அங்கீகாரம் பெறாது தள்ளப்பட்டன.







## காரைக்குடி நகர சபை

### ராஷ்டிரபதிக்கு வரவேற்பு

(நமது நிருபர்)

காரைக்குடி நகர சபையின் சாதாரணக் கூட்டமொன்று 27—8—38 சனிக்கிழமை மாலை 4 மணிக்கு கவுன்ஸில் ஹாலில் தலைவர் ஸ்ரீ ராய. சொக்கலிங்கன் தலைமையில் கூடியது. பின்கண்ட விஷயங்கள் முடிவு செய்யப் பெற்றன.

ராஷ்டிரபதிக்கு வரவேற்பு

அகில இந்திய தேசீய காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ சுபாஷ் சந்திரபோஸ் அவர்கள் காரைக்குடிக்கு விஜயம் செய்யும் பொழுது அன்னாருக்கு முனிஸிபல் சபையின் சார்பாக ஒரு வரவேற்புப் பத்திரம் வாசித்தளிப்பதென தீர்மானிக்கப் பெற்றது.

வீதிகளை திருத்தம் செய்தல்

11-வது வார்டு ஆதித்திராவிடர் தெருவில் சுமார் 100 அடி வரை நெருக்கமாகவும் போக்குவரத்துக்கு இடைஞ்சலாகவுமிருப்பதால் ஷை வீதியை விசாலப் படுத்துவதென்றும் 12-வது வார்டில் 1154 நிர். மின்சார விளக்கை எடுத்து வெ. ராம. வீட்டிற்கு பக்கத்தில் போட்டு முரு. நா. சித. வீட்டுக் கோஞ்சல் கட்டிடத்திற்கு பக்கத்தில் புதிதாக ஒரு விளக்குப் போடுவதென்றும், 12-வது வார்டு வடக்கு வல்லம்பர் தெருவிலிருந்து அரு. அ. வெ. வீதிகான் வரை ஒரு கான் கட்டுவதென்றும் 9-வது வார்டு முனீஸ்வரன் கோவில் சந்திலிருக்கும் பாலம் கைபிடிச் சுவர் கெட்டுப்போய் இருப்பதால் ஷை கைபிடி சுவரை கொஞ்சம் உயர்த்திக் கட்டுவதென்றும் கீழக்கொரட்டியார் வீதியும் சி. மெ. வீதியும் சந்திக்கு மிடத்திலுள்ள இரண்டு பாலங்களிலும் தண்ணீர் சரியாகப் போகாததால் அதை உயர்த்திக் கட்டுவதென்றும் தீர்மானங்கள் செய்யப்பெற்றன.

பாடசாலைகள் கட்டுதல்

7-வது வார்டில் துவாதசி மடத்திற்கும் நந்தவனத்திற்கும் சமீபத்திலுள்ள இடத்தில் ஆண் பெண் பாடசாலைகள் கட்டுவதற்கும் பார்க் அமைப்பதற்கும் இடம் அக்வயர் செய்வதென முடிவு செய்யப்பெற்றது.

வாரச்சந்தை

வாராந்தச் சந்தை நடத்துவதற்கு ஒரு இடம் குறிப்பிட ஸ்ரீ ராய சொக்கலிங்கன், ஸ்ரீ. கெ. மு. லெ. மெய்யப்பனம்பலம், ஸ்ரீ ஆரு.ஆ.ராம.சொக்கலிங்கம் செட்டியார் ஆகிய மூவர் அடங்கிய ஒரு கமிட்டி நியமிக்கப்பெற்றது.

கால்நடை சந்தை

3-வது வார்டில் தனக்குப் பாத்தியமான இடத்தில் ஒரு கால்நடைச் சந்தை நடத்த அனுமதிகோரிய ஸ்ரீ வெ. கரு. வேடப்பன் சேர்வையின் மனு ஒத்திவைக்கப்பெற்றது.

தொழில்வரி

தொழில்வரி விகித்தை அதிகப் படுத்துவது சம்பந்தமான விஷயம் யோசிக்கப்பட்டு தற்சமயம் உள்ள வரிவிகிதமே போதுமென்று தீர்மானிக்கப்பெற்றது.

தீயணைக்கும் மோட்டார்

தீயணைக்கும் மோட்டார் உதவிக்கு தயாராயிருக்கும் பொருட்டு கல்லுக் கட்டியில் அல்லது அதற்குச் சமீபத்தில் ஒரு ஷெட் கட்டி அதில் எப்பொழுதும் தண்ணீருடன் டிரைவர் வேலையாட்களுடன் இருக்கும்படி செய்யவேண்டுமென்று முடிவுசெய்யப்பெற்றது.

பிறகு பல மாமூலான விஷயங்கள் பைசல் செய்யப்பெற்று கூட்டம் 5-30 மணிக்கு முடிவுற்றது.

## காரைக்குடி நகரச்சிவன் கோயிலுக்கு ஸ்கீம்

காரைக்குடி நகரச் சிவன்கோவிலின் நிலைமையை உத்தேசித்து எண்டோமெண்டு போர்டார் ஒரு ட்ராப்ட் ஸ்கீமை ஏற்படுத்தி யிருக்கிறார்கள். அதன் விபரம் வருமாறு:—

1. இந்த ஸ்கீமானது இவ்வுத்திரவு பிறப்புவிக்கப்பட்ட தேதியன்று முதல் ஊர்ஜிதத்திற்கு வரும்.

2. நகரச்சிவன் என்ற ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேஸ்வரர் கோயிலின் நிர்வாகமும், அக்கோயிலைச் சேர்ந்த சொத்துக்களின் நிர்வாகமும், பரம்பரை டிரஸ்டியுடையவும், போர்டாரால் நியமிக்கப்படும் இரண்டு நியமன டிரஸ்டிகளுடையவும் மேற்பார்வையிலிருந்து வரும்.

3. ஷை டிரஸ்டிகளில் ஒருவரை மானேஜிங் டிரஸ்டியாக தாங்கள் பிரியப்பட்ட காலத்திற்கு நியமிக்க போர்டாருக்கு அதிகார முண்டு.

4. நியமன டிரஸ்டிகள், நியமன உத்திரவு காலத்தில் நிச்சயிக்கப்பட்ட காலத்திற்கு உத்தியோகங்களை வகிப்பவராவர். ஹிந்து மதஸ்தாபன பரிபாலன ஆக்ட் 53வது செக்ஷன்படி அதிற்கண்ட காரணங்களைக் கொண்டு, நியமன டிரஸ்டிகளை நிறுத்திவைக்கவும், நீக்கவும் போர்டாருக்கு அதிகார முண்டு. போர்டாரின் தீர்ப்பே இது விஷயத்தில் முடிவானது.

5. மானேஜிங் டிரஸ்டி மாதம் ஒரு முறைக்குக் குறையாமல் கோயில் எல்கைக்குள், முந்திய மாதத்து கணக்குகளை ஒப்புக்கொள்ளவும், கோயில் சம்பந்தமான இதர நிர்வாகத்தை ஆலோசிக்கவும், ஒரு டிரஸ்டிகள் கூட்டம் கூட்ட வேண்டும். இவ்வாறுகூடிய கூட்டம் ஒவ்வொன்றின் நடவடிக்கையும் ஒரு மினிட் புத்தகத்தில் எழுதப்பட்டு வந்திருந்த எல்லா டிரஸ்டிகளாலும் கையெழுத்திடப்பட வேண்டும். அபிப்பிராய பேதமிருக்கும் விஷயங்களில் மெஜாரிட்டியின் தீர்ப்பே முடிவாகும்.

6. மாதச் சம்பளம் 40 ரூ-க்கு மேற்படாமல், ஒரு எக்ஸிக்யூடிவ் ஆபீசரை போர்டார் நியமிக்க வேண்டும். அவர் சம்பளம் கோயில் பண்டுகளிலிருந்து கொடுக்கப்பட வேண்டும்.

7. வேலையை ஒப்புக்கொள்ளு முன் ஷை எக்ஸிக்யூடிவ் ஆபீசர் போர்டார் விருப்பப்படி ரூ 500 செக்யூரிட்டி கட்ட வேண்டும்.

8. எக்ஸிக்யூடிவ் ஆபீசரின் அலுவல்கள்:—

(a) கோயில், ஆபீஸ் இரண்டின் நிர்வாகப் பொறுப்பு.

(b) பட்ஜெட் தீர்மானப்படி வரவுகளை வசூல் செய்து, செலவுகளை பட்வாடா செய்தல்.

(c) ஷை வரவுசெலவுகளுக்கு முறைப்படி கணக்கு வைத்திருத்தல்.

(d) கோயில் பூசைகளை சரிவர நடத்தச் செய்வது.

(e) போர்டுக்கு சட்டப்படி அனுப்ப வேண்டிய ரிஜிஸ்தர்கள், ரிட்டன்கள் இவற்றைக் கவனித்துக் கொள்வது.

(f) கோயில் சிப்பந்திகள் வேலையை மேற்பார்வையிடுவது.

9. எக்ஸிகூடிவ் ஆபீசர் காலாகாலத்தில் பட்ஜெட்டைத் தயாரித்து டிரஸ்டிகள் மீட்டிங்கில் வைக்க வேண்டும். நிறைவேற்றப்பட்டவுடன் போர்டுக்கு உடனே அனுப்ப வேண்டியது. போர்டார் தேவையான திருத்தங்களுடன் பட்ஜெட்டை அங்கீகரிப்பர்.

10. கோயில் சிப்பந்திகள் எக்ஸிகூடிவ்ஆபீசரின் நேரான மேற்பார்வையில் இருப்பர்.

11 டிரஸ்டிகள் எப்பொழுது வேண்டுமானாலும் எக்ஸிகூடிவ் ஆபீசர் வசமிருக்கும் ரிகார்டுகளையும் கணக்குகளையும் பார்வையிடவோ, ரொக்கம் நகைகள் அல்லது இதர ஜங்கம சொத்துக்களை சரிபார்க்கவோ செய்ய அதிகாரமிருக்கிறது.

12 எக்ஸிகூடிவ் ஆபீசர் ஒரு பொழுதும் தன் வசத்தில் ரூ. 200 க்கு மேற்பட்டு ரொக்கத்தை வைத்துக் கொள்ளக்கூடாது. அதற்கு மேற்பட்ட தொகைகளை போர்டாரால்உத்திரவிடப் படும் பிரகாரம், அங்கீகரிக்கப்பட்ட பாங்கியில், கோவில் பேரால் கணக்கில் போட்டு வைக்க வேண்டும். மானேஜிங் டிரஸ்டியானவர் ஷை பாங்குக் கணக்கை நடத்தி வருபவராவர்.

13 கோயில் சொத்துக்களை சாதாரணமாய் எக்ஸிகூடிவ் ஆபீசர், மானேஜிங் டிரஸ்டி முன்னிலையில் அல்லது, அதற்கென குறிப்பிடப்படும் இதர டிரஸ்டியின் முன்னிலையில் பப்ளிக் ஏலத்தில் குத்தகைக்கு விடவேண்டும். சரியானமுகாந்திரம் இருந்தால் அவற்றை போர்டாருக்கு எழுதித் தெரிவித்து, அவர்கள் உத்திரவு பெற்றதின்பேரில் ஷை எக்ஸ்கூடிவ் ஆபீசர் குத்தகைகளை வேறு வழியிலும் பைசல் செய்யலாம்.

14. கோயில் நிர்வாகத்தை யொட்டி அவ்வப்பொழுது போர்டார் உத்தரவுகள் பிறப்பிவிக்கலாம்.

15. இந்த ஸ்கீமில் எந்த சந்தேகம் கிளம்பினாலும் போர்டாரே அதைத் தீர்த்து வைப்பர். அவர்கள் தீர்ப்பே முடிவானது.

16. இந்த ஸ்கீமில் குறிப்பிட்டிருப்பவைகளைத் தவிர, ஹிந்துமத தர்ம பரிபாலன சட்டத்தின் விதிகளும் உப விதிகளும் கோயிலைக் கட்டுப்படுத்துவதாகும்.

## அய்யலூர் ரயில் விபத்து

### சர்க்கார் விசாரணை

அய்யலூருக்கருகில் நடைபெற்ற செங்கோட்டை பாசஞ்சர் விபத்தைப் பற்றிப் பூரணமாக விசாரிக்கும்படி மதுரை, திருச்சி ஜில்லா மாஜிஸ்திரேட்டுகளுக்குச் சென்னை சர்க்கார் உத்தரவிட்டனர். ரயில்வேக்கம்பெனியார் ரயில்வே இலாகா முறைப்படி ஒரு விசாரணை நடத்தினர். இரண்டாவது விசாரணை அந்தரங்கமாக நடைபெறுகிறது. விபத்துக்காளான வண்டி சம்பவம் நிகழ்ந்த இடத்துக்குச் சமீபம் சென்றுகொண்டிருந்த பொழுது, பாதையில் உடைப்பு ஏற்பட்டிருந்ததையறிந்த கிராமவாசிகள் 'அபாயம் அபாயம்' எனக் கூச்சலிட்டது வாஸ்தவந்தானென்றும், ஆனால் ரயில் அதிவேகமாகக்கடந்து சென்றதென்றும், ஒரு சாட்சி சர்க்கார் விசாரணை அதிகாரிகளிடம் தெரிவித்திருக்கிறார்.

ரயில் விபத்தால் மொத்தம் 33பேர் இறந்துபோனதாக ரயில்வே ஏஜண்டு தெரிவித்திருக்கிறார்.

1923-24 முதல் உள்ள சென்ற பதினைந்து வருஷகாலத்தில் தென்னிந்திய ரயில்வே கம்பெனியார் மொத்தம் 8340 லட்சம் பிரயாணிகளை ஏற்றிச் சென்றிருக்கின்றனராம். இதில் 10 பேர்கள் கொல்லப்பட்டனர். பட்டுக்கோட்டை விபத்தில் 9பேர் இறந்தனர் ஆகஸ்டு 26ந் தேதியோடு ரயில்வே இலாகா விசாரணை முடிந்தது. சர்க்கார் விசாரணை 27ந் தேதியன்றுவரை நடைபெற்று செப்டம்பர் முதல் தேதிவரை ஒத்திவைக்கப்பட்டிருக்கிறது. அன்றையதினம் மதுரை கலெக்டர் ஆபீஸில் விசாரணை நடைபெறும். இதுவரை 23 சாட்சிகள் விசாரணை செய்யப்பட்டிருக்கின்றனர்.

விளம்பர மந்திரி கனம் எஸ். ராமநாதன் விபத்தேற்பட்ட இடத்துக்கும் விபத்தில் காயம்பட்டவர்கள் சிகிச்சை பெறும் ஆஸ்பத்திரிகளுக்கும் சென்று நேரில் பார்வையிட்டு விட்டு ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார். விபத்திற்குப் பிறகு அங்கு கொள்ளை நடந்ததாகக் கூறும் வதந்திக்கு ஆதாரமில்லையென்றும், சொத்துக்கள் சேகரிக்கப்பட்டு, போலீஸார் வசம் ஒப்புவிக்கப்பட்டிருக்கின்றன வென்றும் அவர் குறிப்பிட்டிருக்கிறார்.

### உத்தியோக மாற்றம்

திரு. ஏ. ஆர். சி. வெஸ்ட்லேக், ஐ. சி. எஸ். ரஜாவிலிருந்து திரும்பியதும் ராமநாதபுரம் ஜில்லா கலெக்டராக நியமிக்கப்பட்டிருக்கிறார். அன்னாருக்கு சார்ஜ் ஒப்புவித்த பின் திரு. வி. என். குடுவா, ஐ. சி. எஸ். தென் ஆற்காடு ஜில்லா கலெக்டராகச் செல்வார்.

குமரன்

காரைக்குடி
வெகுதானிய-ஞூ ஆவணி-மீ 16உ

## திருவாங்கூர்

நமது மாகாணத்தின் எல்லையிலிருக்கும் ஒரு சுதேச சமஸ்தானத்தைப் பற்றிய வாழ்வு தாழ்வை நாம் கவனிக்க கடமைப்பட்டிருக்கிறோம். திருவாங்கூர் சமஸ்தானமானது சென்னை மாகாணத்தின் எல்லைத் தொடர்புடையது. தெற்கேயுள்ள சமஸ்தானங்களில் அதுதான் பெரிது. அங்கே பெண் கல்வி 100க்கு 35 விதம் பெருகியிருக்கிறது. இதை யறிந்து மிக்க மகிழ்ச்சியடைந்தோம். அடுத்து தீண்டாதாரை ஆலயத்தில் அனுமதித்ததை யெண்ணி மகிழ்ச்சியடைந்தோம். அதற்குக் காரணமாக இருந்து தைரியத்துடன் உத்தரவு நல்கிய அந்த மன்னரை வாயார மனமார வாழ்த்தினோம். இப்போது அங்கே தோற்றுவிக்கப்படும் பயங்கரமான சட்டங்களும் அரசியல் நடவடிக்கைகளும் நம்மைக் கவராமலிருக்க முடியுமா?

திருவாங்கூர் சமஸ்தானம் ஒரு சுதேசநாடு. அங்கே ஆளுநம் மன்னரும், குடிஜனங்களும், திவானும், உத்தியோகஸ்தர்களும் இந்தியர்கள். பிரிட்டிஷ் இந்தியாவைப் போன்றதன்று அது. இந்திய ஆட்சியில் இருக்கும் தொல்லைகள் பலப்பல; ஆள்வோர்வேறு; ஆளப்படுவோர் வேறு; இதற்கிடையில் உத்தியோகம் வகிப்பவர், வியாபாரம் புரிபவர் போன்ற பலர் குறுக்கிடவும் இடமுண்டு. திருவாங்கூரில் இப்படிப்பட்ட பல தொல்லைகளுக்கு இடமில்லையென்று கூறவேண்டியதில்லை.

பிரிட்டிஷ் இந்தியாவில் சுதந்திர வேட்கை தோன்றி வளர்ந்து வருவதை நசுக்க வேண்டுமென்று அடக்குமுறை சட்டங்கள் பலவற்றை ஒன்றன்பின் ஒன்றாக உண்டாக்கினார்கள். தாராள மனப்பான்மை என்பதையே மறந்து கடுமை காட்டத் துவங்கினார்கள். அதன் பயனாக விளைந்ததென்ன? எண்ணிய எண்ணம் பூர்த்தியடையவில்லை. அதற்குப்பதிலாக சுதந்திர உணர்ச்சியும் கிளர்ச்சியும் ஒன்றுக்கு நூறாக வளர்ந்தன. அடக்குமுறைச் சட்டங்கள் எரிகிற நெருப்பில் எண்ணெயை வார்த்ததாகவே முடிந்தது. இதைக் கண்ணாரக் கண்டிருந்தும் திருவாங்கூர் சர்க்கார் அந்தத் தோல்வி வழியைக் கையாள முற்பட்டிருப்பது மிகவும் வருந்தத்தக்க செயலாகும்.

அரசியலிலும் பொதுவாழ்விலும் அனுபவம் பெற்ற திவான் அங்கேயிருக்கிறார். பக்கத்தில் உள்ள மற்றொரு சிறிய சமஸ்தானமானது ஆட்சி முறையில் எவ்வளவு முற்போக்குடன் விளங்குகிறதென்பதும் கவனத்திற்குரியதாக இருக்கிறது. பிரிட்டிஷ் இந்தியாவில் அடக்குமுறை அடைந்த நிலைமை தெரிந்திருந்தும் திவான் கடுமையாக இங்கே அடக்குமுறையில் நம்பிக்கைப்பட்டிருப்பது துரதிருஷ்டவசமென்றே கூறவேண்டும். அங்கு ஏற்பட்டிருக்கிற காங்கிரஸ் தவறான வழியில் நடக்கிறதென்று கூறமுடியவில்லை. போதுமான அளவு சாவதானமாகவே காரியங்களைசெய்து வருகிறது அரசாங்கம் யுவர் சங்கத்தையும் காங்கிரஸ் ஸ்தாபனத்தையும் சட்டவிரோதமான சபை யெனப் பிரகடனப்படுத்தியிருக்கிறது. அடக்குமுறை சட்டங்கள் ஒன்றன்பின்னொன்றாகத் தோற்றுவிக்கப்படுகின்றன. அரசாங்கத்தாரின் மனோபாவத்தை திரு ஜி. இராமசந்திரன் பின்வருமாறு எடுத்துக்கூறுகிறார்:— "திருவாங்கூர் சமஸ்தானக் காங்கிரஸ் கிறிஸ்தவ ராஜ்யத்தைத் திருவாங்கூரில் ஸ்தாபிக்க முயல்வதாக சர்க்கார்கருதி, அதை நசுக்கப்பார்க்கிறார்கள்." ஆனால் உண்மை இது வன்றென்றும், காங்கிரஸில் வகுப்பு வித்தியாச மெதுவும் உரைப்படவில்லை யென்றும் அவர் அறிவிக்கிறார். எது எப்படியிருப்பினும் தேச ஜனங்கட்கு அரசியலுரிமை வேண்டுமென்ற உணர்ச்சி பெருகியபோது அதை அனுசரித்து அரசாங்கம் ஒரு திட்டம் வகுத்துப் பெருந்தன்மையோடு நடந்து கொள்வதில் பிசகொன்றுமில்லை. அதுதான் நியாயமுமாகும். கொடுக்க இஷ்டப்படாதபோது எதாவதொரு காரணத்தை அரசாங்கம் கண்டுபிடித்துச் சொல்வதில் சிரமமேற்படாதென்பது யாவரும் அறிந்தது.

தற்போது போகிற போக்கில் திருவாங்கூர் ராஜ்யம் போய்க்கொண்டிருக்குமானால் அதற்கேற்பட்டிருக்கிற பெருமை தேய்ந்துவருமென்பதை ஆண்டு அரசியல் நடத்துவோர் உணர்தல் வேண்டும்.

## எண்டிசைக் காட்சி

### கவியில் அசடு வழிகிறது

ஜப்பான் தேசத்தில் யோன் நகௌச்சி என்பவர் ஒரு கவி. ஜப்பானியரால் மிகவும் கொண்டாடப்படுபவர். அவருடைய கவி பெரிதும் பாராட்டப்படுகிறது. அக் கவிகளில் என்ன இருக்கிற தென்பதை நம்மால் அறிய முடியவில்லை. ஆனால் அவரைப் பற்றியறிய ஒரு சந்தர்ப்பம் வந்திருக்கிறது. "ஹிந்துஸ்தான் ஸ்டாண்டர்டு" எனும் பத்திரிகையில் மகாத்மாவுக்கும் ரவீந்த்ரருக்கும் அவர் எழுதியிருக்கும் கடிதம் வெளியாகியிருக்கிறது. அதில், "சீன தேசம் மேனாடுகளுடன் சம்பந்தம் வைத்துக்கொண்டு கடனைவாங்கி ஜனங்களின் நன்மைக்கு செலவிடாமல் போர்க் கருவிகளைச் சேகரித்தது. தன் பக்கத்தில் சிறிய தீவிலுள்ளவர்கள் எவ்வளவு பலம் படைத்தவர்களென்பதை அது அறியவில்லை. அதன் பயனை இப்போது அனுபவிக்கிறது. சீன சர்க்காரைத் தோற்கடிப்பதுமட்டுமன்றி அந்நாட்டு ஜனங்கட்கு சகாயமும் செய்ய வேண்டியிருக்கிறது". இது கவியின் உள்ளத்திலிருந்து ஊற்றெடுத்து வருகிற பிரவாகம்! இந்தக் கருத்துத்தான் வயிரமணி. இதைச் சுற்றி சில அசை தளை எல்லாம் சேர்த்து கவி செய்திருக்கிறார் போலும்! கவியின் கருத்திலிருந்து எழும் கருத்து இதுவா? அசடு! பொறாமை, பிடுங்கித் தின்னல், ஆணவக் கொழுப்பு இவையெல்லாம் திரண்டு வாந்தி யெடுப்பதே தவிர இது கவியா என்று கேட்கிறோம்.

### சீனுவின் செயல்

சீன தேச மக்கள் மேனாட்டாரின் தொடர்பு கொண்டது தப்பு. அங்கே கடன் வாங்கியது தவறு. கடன் வாங்கிய பணத்தை போர்க்கருவி செய்தது பிசகு. இந்த அளவுக்கு ஒப்புக்கொள்ளலாம். இதற்காக ஜப்பான் சீன தேசத்தை வேட்டை நாயாகக் கவ்வ வேண்டிய அவசியமென்ன! விஷப் புகையிட்டு மக்கள் தொகுதியை நாசமாக்க வேண்டிய அவசியமென்ன? அடுத்த தீவிலிருப்பவர் பலசாலியாக இருந்தால் பெரிய நிலப்பரப்பில் வந்து வேட்டையாட வேண்டுமா? இதற்கு சமாதானம் சொல்ல ஒரு கவி வேண்டுமா? கவி என்பவன் கருணைக்கடல்! நியாயக் களஞ்சியம்! எளியாரின் வக்கீல்! நிமிர்ந்த பொய்பர்கட்கு யமன்! இவனே புலவன். இவனே கவிஞன்! ஏ ஜப்பான் கவியே! உன் நாட்டைப் போல் நீயுமிருக்கிறாய்! திமிர்கொண்ட ராணுவ முரடர்கட்கு 'ஜாலர்' போடுபவர் கவியன்று! அன்று!

### சீனம் படும்பாடு

சீனத்து நிலைமை நாளுக்குநாள் சாவைநோக்கிப்போய்க்கொண்டிருக்கிறது. அதைக்காக்கக் கடன் பட்ட தேசங்கள் எல்லாம் பெரியன. அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ், ஆகிய தேசங்கள் அங்கே நல்ல தட்டுதட்டியிருக்கின்றன. இவற்றிற்கு அந்த நாடு ஒரு பொதுச்சந்தையாக இருந்து வந்திருக்கிறது. ஆனால் இன்று ஜப்பானியர் கொடுக்கும் குண்டடிக்கு சீன எதிர்த்துச் செத்து வருகிறது. ஜப்பானுக்கு சீனாவில் உரிமை கொடுத்து வந்திருந்தால் இந்த யுத்தமே வந்திருக்காது. மற்ற தேசங்களைக் கட்டியழுத சீன இன்று யுத்தத்தில் அகப்பட்டு மாண்டு மடிந்து வருவது பரிதாபமாக இருக்கிறது. ரஷ்ய தேசம் சீனாவுக்கு உதவி புரிந்து தலையைக் காப்பாற்றுமென்று நம்பப்பட்டது, அதுவும் வெள்ளைதான். கொரியாவில் பெரிய போர் வந்துவிட்டதாக தடபுடல் செய்யப்பட்டது. அதன் பயனாக சீனாவாகை மாலை சூடும் என்று கூறப்பட்டது. அபிஸீனியா, ஸ்பெயின், சீன மாதிரி நாடுகள்தான் புலிக்கு ஆட்டுப் பலி கிடைத்தமாதிரி இருப்பனவாகு மென்பது தெள்ளத் தெளிய விளங்கிவிட்டது. சீன தேசத்தில் பெரும் பகுதி-நல்ல வளமும் வசதியுமுள்ள பகுதி யெல்லாம் ஜப்பானிடம் போவதில் தடையிருப்பதாகத் தோற்றவில்லை. அப்பால் மற்ற வல்லரசுகள் ஜப்பானுடன் சீனாவில் தங்கட்கு வியாபார உரிமைக்கும் மூலப்பொருள் ஏற்றுமதிக்கும் ஒப்பந்தம் செய்யும். இதுதான் ஸ்பெயினில் இன்று நாம் காணும் காட்சி.

### சமையல் அஜாக்ரதை

சமஸ்பூர் என்ற இடத்தில் ஒரு தனிகர் தமது புதல்வனுக்கு உபநயனம் செய்தாராம். அதற்காக நடந்த விருந்தில் சாப்பிட்டவுடன் வைத்தியரை அழைத்து வருவதற்குள் ஒவ்வொருவராக பத்துப்பேர் இறந்து போயினராம். காரணம் சமையற் பாத்திரத்தினடியில் ஒரு பல்லி இருந்து இறந்து ஆகாரத்தில் கலந்துவிட்டது தான் என்று சொல்லப்பட்டது. இம்மாதிரியான சம்பவம் ஆங்காங்கே நேர்வதைக் காண்கிறோம். சமையல், பொறுப்புடனும் கவனத்துடனும் செய்யப்பட வேண்டிய தொரு காரியமாக இருக்கிறது. இதனைப் பலர் அலட்சியப்படுத்திவிடுகின்றனர். பலநாட்கட்கு முன்னர் அலம்பிப்போட்ட பாத்திரங்களை அப்படியே எடுத்து சமையலடுப்பில் ஏற்றுவதனால் இப்படிப்பட்ட சம்பவம் ஏற்படுகிறது. உபயோகிக்கும்போது பார்த்து உபயோகிக்க வேண்டும். இன்னும் பல மாதிரியான அசுத்தங்கள் கவனிக்கப்படுவதே இல்லை. அவை உடனே மனிதர்களை முடிவுக்குக் கொண்டுவரா விட்டாலும் நாளடைவில் நோய்க்குட்படுத்துவதாக இருக்கிறது.

### கம்பளிப் பூச்சி

இனி கம்பளிப் பூச்சி தோன்றுங் காலம் முருங்கை, மலம் பூவரசு முதலிய பல மரங்களில் இப்பூச்சி தோன்றி வளர்கிறது. இதில் ஒன்று தடுமாறி ஆகாரத்திற் கலந்தால் குடும்பத்தோடு மூக்தியடைய வேண்டியது தான். இப்படிப் பல விடங்களில் நேர்ந்திருக்கிறது. இப்பூச்சி மரத்தைவிட்டுப் புறப்பட்டு ஊர்ந்து விடுமுழுமையும் சஞ்சரிக்கும். ஜாக்ரதையாக இருத்தல் வேண்டும். பட்டால் அரிக்கும். தடிக்கும். துன்பஞ் செய்யும் ஆகாரத்தில் சேர்ந்தால் பிழைப்புக்கு இடமில்லை. கம்பளிப்பூச்சி தோன்றுமானால் உடனே அந்த மரத்தை வெட்டி விடுதல் மிகவும் அவசியமாகும்.

### பலே மந்திரிகள்

பம்பாயில் 'மலபார் குன்று' ஒரு சிறந்த இடம். வசிப்பதற்கு அது இன்பமயமா யிலங்குகிறது. அங்கே இரண்டு பங்களாக்கள் மந்திரிகள் வசிப்பதற்காக இருக்கின்றனவாம். அவைகள் மிக ஆடம்பரமானவை. அவைகளில் வசிக்க இப்போதுள்ள மந்திரிகள் விரும்பவில்லை. ஆதலால் அவற்றை விற்றனர். ஏழு லட்சத்துக்கு அவை விலைபோயிற்று. அந்தப் பணத்திலிருந்து கோட்டையிலேயே ஒன்பது பங்களாக்கள் கட்டப்படுமாம். பங்களா ஒன்றுக்கு 30,000 தான் செலவாகுமென்று தெரிகிறது. நல்ல செட்டு. மந்திரிகள் செயல் பெரிதும் பாராட்டத்தக்கது. ஆனால் நமது சென்னை மந்திரிகளின் தியாகம் இன்னும் பெரிது. கட்டப்பட்ட பங்களாக்களையே வேண்டாமென்று வாடகைக் கட்டிடங்களில் இருந்து வருகின்றனர். நியாயந்தானே! நமது ஜனங்கள் எல்லாருக்கும் சொந்தவீடா இருக்கிறது? பொது ஜனப் பிரதிநிதிகள் சந்தர்ப்பம் நேரும்போது தியாகத்தையும் அடக்கத்தையும் கைக்கொண்டு நடப்பதில்தான் பெருமை மிகுமென்பதில் ஐயமில்லை.

## உள்ளூர்ச் செய்திகள்

கட்டிட கூட்டுறவுச் சங்கம்:— 24-8-38உ மாலை கோவாபரேடிவ் பாங்க் கட்டிடத்தில் டாக்டர் சுப்பிரமணியமவர்கள் தலைமையில் கூடிய கூட்டத்தில், ஷை சங்கம் ஸ்தாபிப்பதென்று தீர்மானிக்கப்பட்டது. சங்கத்தின் விதிகள் படித்து ஒப்புக்கொள்ளப்பட்டன. ஆஜராயிருந்த 20 பேர்களும் அங்கத்தினராகச் சேர்ந்து கொண்டனர்.

சங்கீதக் கச்சேரி:—காரைக்குடி திருவாளர் அ. மெ. அ. பழனியப்ப செட்டியார் சகோதரன் திருவாளர் அண்ணாமலைசெட்டியார் திருமணத்தைமுன்னிட்டு ஷையார் வீட்டில் 13-9-38உ செவ்வாய்க்கிழமை மாலை 4 மணிக்கு செம்மங்குடி சீனிவாசய்யர் வாய்ப்பாட்டு, கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளை பிடில், பாலக்காட்டு மணி மிருதங்கம் ஆகியவைகளடங்கிய ஒரு சங்கீதக் கச்சேரி நடைபெறும்.

அச்சுத்தொழிலாளர் சங்கம்:—ஆகஸ்டு 27உ மாலை 5-மணிக்கு காரைக்குடி ஜில்லா அச்சுத் தொழிலாளர் சங்கத் திறப்புவிழா தாகூர் வாசகசாலைக் கட்டிடத்தில் 'செட்டிநாடு' ஆசிரியர் திரு. எ. எஸ். சர்மா அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. காரைக்குடியிலுள்ள எல்லா அச்சுக்கூடத் தொழிலாளர்களும், வெளியூர் அச்சாபீஸ்களிலிருந்தும் சுமார் 100 பேர்களுக்கு மேல் வந்திருந்தனர். இச் சங்கத்திற்கு திரு. சா. கணேசன் தலைவர்; திரு. டி. பி. கோவிந்தசாமி ராவ் காரியதரிசி.

## பிரித்த போர்டுகள் எல்லாம் ஒன்று சேர்க்கப்படும்

மூன்றுவது குரூப்பைச் சேர்ந்த போர்டுகளில் பிரிவினையான வற்றை அவற்றிற்கு அடுத்த வருஷம் தேர்தல் நடக்கும்போது ஒன்றுக்கப்படுமென்ற நிலைமை மாற்றப்பட்டு விட்டதென்றும், இந்த செப்டம்பர் முதல் வாரத்தில் நோட்டீஸ் அனுப்பப்படுமென்றும், அக்டோபர் 15உ கலெக்டர் சார்ஜ் எடுத்துக்கொள்வா ரென்றும் பின்னர் தலைவர் உபதலைவர் தேர்தல் நடைபெற்று போர்டு ஒன்றாகி விடுமென்றும் நம்பிக்கையான இடத்திலிருந்து செய்தி கிடைத்திருக்கிறது. பிரிக்கப்பட்ட இரண்டு போர்டுகளிலும் உள்ள தேர்தல் அங்கத்தினர்கள் இருந்து வருவார்கள். பின்னால் சேர்த்துக் கொள்ளப்பட்ட அங்கத்தினர்களின் ஸ்தானம் காலியாகிவிடும். இந்த குரூப்பில் நமது இராமநாதபுரம் ஜில்லாவும் சேர்ந்தது.



## காரைக்குடியில் கல்யாண ஆக்ஷேபம்

(ஒரு நிருபர்)

முத்து ராம. சொ. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள் பேத்திக்கும், நா. நா. வீட்டுப்பையனுக்கும் ஆவணி மாதம் 12உ கல்யாணம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. மணமகனுக்கு 18 வயது ஆகவில்லை யென்று கூறி ஷை விவாகத்தை தடைசெய்ய வேண்டுமென்று தேவகோட்டை டிவிஷனல் மாஜிஸ்டிரேட்டிடம் இவ்வூர் பால்ய விவாக ஒழிப்பு சங்கத்தின் காரியதரிசி ராம. அழகப்ப செட்டியார் ஒரு மனுவைத் தாக்கல் செய்தார். 11உ யன்று விசாரணைக்கு வந்தது. காரைக்குடி முனிஸிபல் டாக்டர் திரு. ரத்தினசாமி M. B., B. S. தேவகோட்டை கவர்ன்மெண்டு ஆஸ்பத்திரி டாக்டர் ஆகியோர் 18 வயது ஆகியிருக்கக் கூடுமென்று தெரிவித்தார்கள். கல்யாணக்காரர் தரப்பில் 18 ஆகிவிட்டதென்று கூறப்பட்டது. ஸ்டே ஆர்டர் கொடுக்க இயலாதென்று மாஜிஸ்ட்ரேட் தீர்ப்பளித்ததால் கல்யாணம் தடையின்றி மங்களமாக 12உ நடைபெற்றது. காரியதரிசி மட்டும் மிகுந்த சிரத்தையுடன் கோர்ட்டுக்கு வந்திருந்தார். மற்ற கமிட்டி மெம்பர்கள் கூட ஒருவரும் காணப்படவில்லை.

## பிள்ளையார்பட்டியில் கூட்டம்

வருஷாந்திரக் கூட்டம் செவ்வாயன்று நடைபெற்றது. தேவகோட்டை ஸ்ரீமான் நாக. சு. ராம. பழனியப்ப செட்டியாரவர்களும், அ. புதூர் வயி. நாக. ராம. வகைக்காக ஷை அ. வெ. சுப்பிரமணியன் செட்டியாரும் வயி. அ. சின்னையா செட்டியாரும் காரியத்தனம் ஒப்புக்கொண்டார்கள். பெண்கட்கு ஒரு விடுதி கட்ட ரூ. 10,000 வரை அனுமதிக்கப்பெற்றது. இந்த விடுதி வடக்கு எல்லையின் கீழ் பக்கத்தில் கட்டப்பெறும். சிராவயல் செல்லுவதற்குப் போடப்படும் ரோடுக்கு கோவில் எல்லையில் இனமாக இடம் உதவுவதென்றும், ஊரணிக்கு மூடு மடை போடுவதென்றும் தீர்மானிக்கப்பெற்றது. மின்சார விளக்கு போடுவதற்கு வேண்டியதைச் செய்ய 13 பேர் கொண்ட கமிட்டி நியமிக்கப்பெற்றது.

இவ்வருஷத்தில் திருவிழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. 186 பெண்கள் சதுர்த்தி விரதம் விட்டனர். ஓ. சிறுவல், கோனபட்டு சாரணர் படைக் கோஷ்டியினர் உற்சவத்தில் தொண்டாற்றி உதவி புரிந்தனர்.

## சீர்திருத்தம் வருகிறது

காரைக்குடி மித்திராவயலார் வீட்டில் சொ. அருணாசலத்திற்கு ஆவணி 12உ நடைபெற்ற கல்யாணத்தில் மணமகன் நேரே திருப்பூட்டினார். மணமகளின் சிறியதாயார் கண்டனூர் ஸ்ரீமதி மெய்யம்மை ஆச்சி அவர்கள் சந்தனக்கலர் புடவை சிவப்புக்கரை குறியுள்ளதைபுடுத்தி தங்கச் சங்கிலியும் போட்டுக்கொண்டு திருப்பூட்டச் சென்றது குறிப்பிடத்தக்கது.

## மோட்டார் விபத்து

(ஒருநிருபர்)

தேவகோட்டை வெள்ளைய ராவுத்தர் என்பவர் ஆகஸ்டு 29உ எழுவங்கோட்டையார் தெருவில், அதாவது போலீஸ் ஸ்டேஷனிலிருந்து ஒரு பர்லாங்கு தூரத்தில் போய்க் கொண்டிருக்கும்பொழுது, இலந்தக்குளத்தார் என்னும் செட்டியாருடைய டி. ஐ. என். 725 பேபி ஆஸ்டினால் மோதுண்டு பலத்த காயமடைந்து இவ்வூர் ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வருகிறார். இக் காரை ஓட்டிக்கொண்டு வந்த டிரைவர் காரை அவ்விடத்திலேயே விட்டுவிட்டு ஓடிவிட்டான். போலீசார் புலன் விசாரித்து வருகிறார்கள்.

## ரெட்டை அரு. குடும்ப வழக்கு

### ஹைக்கோர்ட்டு அப்பீல்

(நமது நிருபர்)

இரண்டு ரிஸீவர்களை நியமித்து தேவகோட்டை சப் கோர்ட்டு போட்டிருக்கும் உத்தரவை அமுல் செலுத்தாமல் நிறுத்தி வைக்க வேண்டுமென்று பிரார்த்தித்து தாக்கல் செய்யப்பட்டிருந்த வழியில் மனு ஒன்றை நேற்று முன்தினம் ஜஸ்டிஸ் லக்ஷ்மணராவ் பைசல் செய்தார்.

ரிஸீவர்கள் நியமன உத்தரவை ஆட்சேபித்து அப்பீல் செய்துகொள்ளப்பட்டது. இந் நியமனத்தை நிறுத்தி வைக்கும்படியும் ஹைக்கோர்ட்டில் மனுச்செய்து கொள்ளப்பட்டது. ரிஸீவர்களிடம் எஸ்டேட் ஒப்படைக்கப்படாத பக்ஷத்தில் தற்காலிகமாக நியமனத்தை நிறுத்திவைக்க, ஆகஸ்டு 19-ம் தேதி ஹைக்கோர்ட் ஜட்ஜ் அனுமதியளித்தார். இம் மனு சம்பந்தமான முடிவான விசாரணை 25உ. போடப்பட்டிருந்தது. இதற்குள்ளாக, ரிஸீவர்கள் எஸ்டேட்டை தங்கள் ஆதீனத்திற்குட்படுத்தி விட்டனரென்று, தேவகோட்டை சப் ஜட்ஜ் தெரிவித்துவிட்டார்.

ஹைகோர்ட்டில் மனுதார் தரப்புக்கு ஆஜரான சர் அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர், பிரஸ்தாப எஸ்டேட்டுக்கு ஏராளமான ஸ்தாவர சொத்துகள் இம் மாகாணத்தில் மட்டுமல்ல மலேயா, இலங்கை, பிரெஞ்சு கொச்சின் சீன முதலிய அயல் நாடுகளிலும் இருக்கின்றனவென்றும், ரீசிவர்கள் ஆகஸ்டு மீ 18ம் தேதி இரவு 7 மணிக்கு பங்களாவுக்குச்சென்று கணக்குப் பிரகாரம் ரொக்க இருப்பை சரிபார்த்ததைமட்டும் எடுத்துக்கொண்டு எஸ்டேட்டை ரிசீவர்கள் ஏற்றுக்கொண்டு விட்டதாகக் கூறமுடியாதென்றும் வாதாடினார்.

ஹைக்கோர்ட் ஜட்ஜ் 'நிறுத்தி வைப்பு மனுவைத் தள்ளிவிட்டார். ரிஸீவர்கள் ஏற்கனவே எஸ்டேட்டை தங்களாதீனத்திற்குட்படுத்திவிட்டன ரென்றும், நிறுத்தி வைப்பதற்கு இனி வேறு எதுவும் இருப்பதாகத் தமக்குத் தெரியவில்லையென்றும், ஜட்ஜ் கூறினார். செப்டம்பர் 12-ம்தேதி அப்பீல் விசாரணைக் கெடுத்துக்கொள்ளப்படுமென்று ஜட்ஜ் அறிவித்தார்.

## திருவிதாங்கூரில் அடக்குமுறை

### ஐந்து அட்வகேட்டுகள் கைது

திருவிதாங்கூர் சமஸ்தானக் காங்கிரஸ் சட்டமறுப்பு இயக்கம் ஆரம்பிக்கப் போவதாக அறிக்கை வெளியிட்டதும், பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள கிரிமினல் திருத்தச் சட்டத்தைப் போன்ற ஒரு சட்டத்தை கவர்ன்மெண்டார் இயற்றி வைத்தனர். இதன்படி, சட்டத்தை மீறிப் பொதுக் கூட்டங்களில் பேசியதற்காக காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ பட்டம் தாணு பிள்ளையும் ஸ்ரீ டி. யம். வர்கீஸும் கைது செய்யப்பட்டு, தலா ஒரு வருஷ வெறுங் காவலும், 800 ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டனர். கொல்லத்தில் தடையுத்தரவை மீறிய இருவருக்கு தலா 13 மாதக் கடுங்காவலும், 1300 ரூ. அபராதமும் விதிக்கப்பட்டது.

தடையுத்தரவை மீறி நடத்தப்படும் கூட்டங்களின் விவரங்களைப் பிரசுரிக்கக் கூடாதென்றும், பிரசுரிப்போர் தண்டிக்கப்படுவார்களென்றும், இந்த விதி திருவிதாங்கூரிலுள்ள பத்திரிகைகளை மட்டுமின்றி வெளியிலுள்ள பத்திரிகைகளையும் கட்டுப்படுத்து மென்றும் எச்சரிக்கை செய்யப்பட்டிருக்கிறது.

ஆகஸ்டு 29உ திருவனந்தபுரம் கடற்கரையில் 15000 பேர்கள் கொண்ட கூட்டம் கூடியது. 5 அட்வகேட்டுகள் தடையுத்தரவை மீறிப் பேச முயன்றபோது கைது செய்யப்பட்டனர். கூட்டத்தைக் கலைக்க தடியடிப் பிரயோகமும் நடத்தப்பட்டது. கூட்டத்தில் கற்கள் வீசப்பட்டன. ஜில்லா சூப்பிரண்டுக்குக் காயமேற்பட்டது. அவரது கார் தீக்கிரையாயிற்று. கல் வீச்சினால் 35 கான்ஸ்டபிள்கள் காயமடைந்தனர்.

## விதவா விவாகம் செய்திருந்தால்!

(ஒரு நிருபர்)

நேமுத்துப்பட்டியில் ஈ. கா. பழ. நா. நாராயணன் செட்டியார் மகளை 50 வயதுக்கு மேற்பட்ட மெ. மு. பழ-வுக்குக் கல்யாணம் செய்யப்பட்டிருந்தது. அந்த ஆச்சி பால்யத்திலேயே விதவையாகிவிட்டார்கள். ஆச்சி அவர்கள் வெளியூர்களில் வசித்து வந்தார்கள். இப்பொழுது ஷையார் தங்கைக்கு ஆவணிமீ 12உ கல்யாண ஏற்பாடு செய்யப்பட்டது. முதல் நாள் சீர்வைக்கிற தினத்தன்று மாலையில் ஷை ஆச்சி தேவகோட்டை டிவிஷனல் மாஜிஸ்டிரேட்டிடமிருந்து ஆர்டர்பெற்று இன்ஸ்பெக்டர் கான்ஸ்டபிள்கள் வக்கீல் சகிதமாக நேமத்தான் பட்டிக்கு வந்து சேர்ந்தார்கள். சீர் வைத்திருக்கிற சாமான்களில் பலவும் பெண் அணிந்திருக்கிற நகைகளில் பலவும் தன்னுடையவைஎன்றும் அதை மோசமாக கல்யாணத்துக்கு உபயோகப்படுத்துகிறார்களென்றும் கூறியதாகத்தெரிகிறது. இந்த விவகாரம் திர சுமார் 12மணி ஆகிவிட்டது. கடைசியில் அந்த ஆச்சி குறிப்பிட்ட சாமான்களை ஜப்தி செய்துகொண்டு போய்விட்டார்கள். இரவு 2மணிக்குத்தான் மாப்பிள்ளை அழைக்க வேண்டியதாயிற்று. எல்லாரும் இப்படிப்பட்ட நிகழ்ச்சியைக் கண்டு கவலையும் வருத்தமும் கொண்டார்கள். வயோதிகருக்கு சிறு பெண்களைக் கல்யாணம் செய்வது பிசகென்றும், விதவையான பெண்ணுக்கு நல்ல மாப்பிள்ளை பார்த்து மறுமணம் செய்ய வேண்டியது வாழ்க்கைக்கு மிக மேன்மை யென்றும் அப்படிச் செய்யாமல் இருப்பது பெருங்கேட்டையும், துன்பத்தையுமே தருகிறதென்றும் எல்லோரும் பேசிக்கொண்டே யிருந்தனர். கல்யாணம் முழுமையும் இதே பேச்சாக இருக்கிறது.

## தீ விபத்து

(நமது நிருபர்)

தேவகோட்டைக்கும் இராம நகருக்கும் இடையேயுள்ள காட்டுத் தண்ணீர் பந்தல் அருகாண்மையிலிருக்கும் மிட்டாய் வியாபாரி இராஜகோபால் நாயுடு வீடு 26உ நடு நிசியில் தீப்பற்றிக்கொண்டது. வீட்டுக்காரன் கட்டப்பொம்மு நாடகம் பார்க்கப்போயிருந்தான். வீட்டில் அவன் மனைவியும், தம்பியும் தூங்கிக்கொண்டிருந்தார்கள். ஆள் தப்பிப்பதே கஷ்டமாக இருந்தமையால் உள்ளிருந்த சாமான்கள் ஒன்றும் வெளியே கொண்டுவர முடியவில்லை. போலீசார் புலன் விசாரித்து வருகிறார்கள்.

## ஜீவனாம்ச வழக்கு

(நமது நிருபர்)

கோட்டையூர் கருப்பன் செட்டியார் என்பவர் பத்மாவதி அம்மாள் என்பவளை வைப்பாக வைத்திருந்ததாகவும். அவளுக்கு ஷையார் மூலம் ஒரு பெண்குழந்தை பிறந்தது என்றும் பிறகு பத்மாவதி அம்மாளை புறக்கணித்துவிட்டு தன் சுய ஜாதியில் ஒரு பெண்ணைக் கலியாணம் செய்து கொண்டாரென்றும், தனக்கும் தன் குழந்தைக்கும் ஜீவனாம்சம் வஸ்திரம் முதலியவை கொடுக்க வேண்டுமென்றும், கோரி ஒருமனு ஷையாளால் தேவகோட்டை ஜாயிண்டு மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் கொடுக்கப்பட்டு ஆகஸ்டு 27உ விசாரணைக்கு வந்தது. 4 சாக்ஷிகள் விசாரிக்கப்பட்டனர். 12-9-38உ மறு விசாரணை போட்டிருக்கிறார்கள்.

## மாங்குடி பாகவதர் காலமானார்

ஆகஸ்டு மாதம் 25-ந் தேதியன்று இரவு 8 மணிக்கு அகர மாங்குடியில், கதாகாலக்ஷேபம் செய்வதில் பிரக்யாதி பெற்ற மாங்குடி சிதம்பர பாகவதர் காலமானார். இறக்கும்போது அவருக்கு வயது 60.

## மார்க்கெட் நிலவரம்.

### சென்னை மார்க்கெட்

சென்னை, ஆகஸ்டு 30உ

| | | | |
|---|---|---|---|
| பம்பாய் ஆலைத் தங்கம் | 35 | 15 | 0 |
| ஷை வாய்தா | 36 | 0 | 6 |
| மூனா தோலா 1-க்கு | 35 | 9 | 0 |
| சவரன் ரொக்கம் | 23 | 8 | 3 |
| ஷை சில்லரை | 23 | 8 | 6 |
| வெள்ளி 100 ரூ. எடை | 51 | 10 | 0 |
| ஷை சில்லரை | 0 | 8 | 6 |

### கொழும்பு மார்க்கெட்

கொழும்பு, ஆகஸ்டு 29உ

ரப்பர்

| | |
|---|---|
| கிரேப் ரப்பர் விலை | 45¾ சதம் |
| ஷை கூப்பன் | 34 " |
| ஷை டீ கூப்பன் | 46½ " |

கொப்பரா

கொப்பரு விலை முதல்தரம் ரூ. 26.00

### லண்டன் மார்க்கெட்

லண்டன் ஆகஸ்டு 29உ

ரப்பர் விலை ராத்தல் ஒன்றுக்கு ஏழேமுக்காலே அரைக்கால் பென்ஸ்

### சிங்கப்பூர் மார்க்கட்

சிங்கப்பூர் ஆக 29உ

ரப்பர் பீக்கல் ஒன்றுக்கு முப்பத்தாறு வெள்ளி அறுபத்தேழு காசு.

## கப்பல் செய்திகள்

### நாகபட்டினத்திற்கும் பினாங்குக்கும்

(ஏஜெண்டிடமிருந்து)

வருதல்

கப்பல்கள், மலாய் நாட்டிலிருந்து நாகபட்டணத்துக்கு வரும் தேதி வருமாறு:—

| | |
|---|---|
| ரஜூலா | 1—9—38 |
| ரோனா | 15—9—38 |
| ராஜூலா | 29—9—38 |

புறப்படுதல்

கப்பல்கள் நாகபட்டணத்திலிருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும் விபரம் வருமாறு:—

| | |
|---|---|
| ரஜூலா | 10—9—38 |
| ரோனா | 24—9—38 |

### பிரஞ்சு மெயில்

புதுச்சேரியிலிருந்து சிங்கப்பூர், சைகோன் புறப்படும் கப்பல்கள்:-

| | |
|---|---|
| ஆண்டிரெ லெபன் | 26-9-38 |
| டி ஆர்டக்னன் | 24—10—38 |

பிரெஞ்சு மெயில் விவரங்களுக்கு:—

H. B. ஹுசேன் & சன்ஸ்,
கப்பல் ஏஜண்டுகள்,
புதுச்சேரி.

### P. & O. மெயில்

கொழும்பிலிருந்து, நேராக சிங்கப்பூருக்குப் புறப்படும் கப்பல்களின் விபரம் வருமாறு:—

| | |
|---|---|
| ராஜபுட்டானா | 4—9—38 |
| ராஞ்சி | 18—9—38 |
| ரான்புரா | 2—10—38 |

## பஞ்சாயத்து போர்டு கலைக்கப்பட்டது

(நமது நிருபர்)

திருப்பத்தூர் பஞ்சாயத்து போர்டைக் கலைத்து திரு. முகம்மது கௌஸ் அவர்களை ஸ்பெஷலாபீஸராக நியமனம் செய்து சர்க்கார் உத்திரவு பிறப்பித்திருக்கின்றனர். இவ்வேற்பாடு ஒரு வருடகாலத்திற்கு நடைபெறும்.

## ஆலயப் பிரவேச மசோதா

சென்னை சர்க்கார் தயாரித்திருக்கும் ஆலயப் பிரவேச மசோதா வெளியாகிவிட்டது. மலபாருக்கு மட்டும் இந்தமசோதா உபயோகப்படும். ஜாதி ஹிந்துக்களில் பெரும்பாலோர் சாதகமாக வோட் கொடுத்தால் ஆலயங்கள் ஹரிஜனங்களுக்கு திறந்து விடப்படும். ஒவ்வொரு தாலூகாவும் ஒரு ஓட் தொகுதி. குறிப்பிட்ட கோவிலுக்குள் ஹரிஜனங்களை அனுமதிக்க வேண்டுமென்று 50 ஜாதி ஹிந்து வோட்டர்கள் மகஜர் கொடுத்தால் அந்த தாலூகாவில் ஓட் எடுக்கப்படும்.

மெஜாரிட்டி சாதகமாயிருந்தால் அந்தக் கோவில் திறந்துவிடப்படும். அப்புறம் 2 வருஷங்களுக்கு அந்த தாலூகாவில் வேறு கோவில்களுக்கு வோட் எடுக்க வேண்டியதில்லை. அந்த தாலூகாவிலுள்ள மற்ற கோவில்களின் தர்மகர்த்தாக்கள் இஷ்டப்பட்டால் அல்லது 50 ஜாதி ஹிந்து வோட்டர்கள் கையெழுத்துப் போட்டுக் கொடுத்தால் தர்ம கர்த்தாக்கள் குறிப்பிட்ட கோவில்களை திறந்துவிட வேண்டும். மேலும் தர்ம கர்த்தாக்கள் இஷ்டப்பட்டால் எந்தக்கோவிலையும் எந்த தாலூகாவிலும் திறந்துவிடப் போவதாக அறிக்கை செய்யலாம். 50 ஜாதி ஹிந்து வோட்டர்கள் கையெழுத்திட்டு அதை ஆட்சேபித்தால், அப்புறம்தான் வோட்டுக்கு விடப்படும். ஒரு மாதத்திற்குள் யாரும் ஆட்சேபனை செய்யவில்லையென்றால், ஜனங்களின் அநுமதி பெற்றதாக கருதி கோவில் திறந்துவிடப்படும். எந்தத் தாலூகாவிலாவது விரோதமாக வோட் கிடைத்தால் 2 வருஷங்களுக்கிடையில் மறுபடிவோட் எடுக்கக்கூடாது.

—

### பெண் தாக்கப்பட்டாள்

தேவகோட்டை பழ. அ. வீதியிலுள்ள பெ. எ. பழ. பழனியப்ப செட்டியாருக்கும் ஷை தம்பி மாணிக்கம் செட்டியாருக்கும் வீட்டுத் தகராறு இருந்துவந்தது. ஷை பழனியப்ப செட்டியார் பர்மாவுக்கு போய்விட்டார். ஷையார் மனைவி ஆனந்தவல்லி ஆச்சி 27-8-38ல் தன்வீட்டில் தூங்கிக்கொண்டிருக்கும் சமயம் 3 பேர் ஆயுதங்களுடன் தாக்கினார்களென்று சொல்லப்படுகிறது. ஆனந்தவல்லிஆச்சி சப்தம் போடவே திருடர்கள் ஓடி விட்டார்கள். வலது பக்கம் [illegible] பல இடங்களிலும் பலத்த காயம் ஏற்பட்டது. ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்றுவருகிறாள். போலீசார் புலன் விசாரித்துவருகிறார்கள்.

—

### பிராமண மாதுக்கு தீவாந்திர சிட்சை

கல்லிடைக் குறிச்சியைச் சேர்ந்த சுப்புலட்சுமி அம்மாள் என்ற பிராமணப்பெண், தமது நெருங்கிய பந்துவான குளத்துஐயர் என்ற வயோதிகரை சென்ற டிசம்பர் மாதம் அரிவாளால் தாக்கிக் கொலை செய்ததாக ஏற்பட்ட வழக்கில், திருநெல்வேலி செஷன்ஸ் ஜட்ஜ் விசாரித்துத் தீவாந்தர சிட்சை விதித்திருக்கிறார்.



## விதவா விவாகத்தில் வீண் விவாதம் எதற்கு?

காரைக்குடி முனிஸிபல் கவுன்ஸிலர் ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார் எழுதுவதாவது:—

விதவாவிவாகம் என்பது சமூக சீர்திருத்தத்தில் ஓர் பகுதி. இதனை அரசியல் கலப்பற்ற சீர்திருத்த வாதிகளென்போரும், தனி அரசியல் வாதிகளென்போரும் மறுக்கமுடியாத உண்மை.

சமூகச்சீர்திருத்தமும், அரசியல் சீர்திருத்தமும் மனிதர்கட்கு இரு கண்கள் போன்றவை. அவைகளில் ஒன்றை விடுத்து ஒன்றைச் செய்தால், அதனை பரிபூரண சீர்திருத்தம் என்று கூறமுடியாது. பொது மக்களின் நன்மையை நாடுகின்ற ஒவ்வொருவரும் மேற்கூறிய இருவகை சீர்திருத்தங்களையும் தன் பிறப்புரிமையாகக் கொள்வதே சரிய கொள்கையாகும்.

ஆனால் அரசியல் வாதிகளென்போர், சமூகச் சீர்திருத்தம் இப்பொழுது தேவையில்லையென்றும், அரசியல் சீர்திருத்தம் அடைந்தால், சமூகச் சீர்திருத்தம் மிக இலகுவில் கிடைக்குமென்றும் சொல்லுகிறார்கள் அதுபோலவே சமூகச் சீர்திருத்த வாதிகள், சமூகச் சீர்திருத்தம் கிடைத்தால் அரசியல் சீர்திருத்தம் மிக இலகுவென்று கூறுகிறார்கள். இந்த மனப்பான்மை யடைந்தவர்களை பிற்போக்கான வர்களென்றே சொல்ல வேண்டும். சமூகச் சீர்திருத்தம் அரசியல் சீர்திருத்தத்திற்கும் அரசியல் சீர்திருத்தம் சமூகச்சீர்திருத்தத்திற்கும், ஒன்றுக்கொன்று தவிர்க்க முடியாத உதவியளிக்கக்கூடியதென்பதை எந்த அறிவாளியும் மறுக்கமாட்டான்.

இதே கருத்தைத்தான் சென்ற 21-8-38-ல் காரைக்குடி மாதர் மறுமண சகாய சங்கத்தில், ஸ்ரீ பட்டுஐயருக்கும், ஸ்ரீமதி கிருஷ்ணம்மாளுக்கும் நடைபெற்ற மறுமணத்தின்போது குறிப்பிட்டேன். அதுபற்றி ஊழியனில் ஓர் உள்ளூர் நிருபர் எழுதியிருப்பது மிக வேடிக்கையாகவிருக்கிறது. திருமணத்திற்கும், அரசியலுக்கும் சம்பந்தமில்லையென்றும், அரசியலைவிட சீர்திருத்தத்துறையே பிரதானமானதென்று பொருள்படவும் நான் கூறியதாக அந்த நிருபர் எழுதுகிறார். அல்லாமலும், நான் இந்த வார்த்தையைப் பேசிக்கொண்டிருக்கும்போது, ஸ்டாலின் ஜகதீசன் உண்ணாவிரதத்தின்போது, அவருக்கு உதவியாக நின்று உதவிசெய்த ஒரு சுயமரியாதைக்காரர் அங்கு வந்ததாகவும், 'அப்போது அரசியலுக்கும் இத் திருமணத்திற்கும், சம்பந்தமில்லை என்று நான் தெருவித்திராவிடில், அந்த ஹிந்தி எதிர்ப்பு சுயமரியாதைக்காரர் வெளியில் நின்றபடியே ஓடிப்போயிருப்பாரென்றும், நான் அவருக்குச் சாதகமான வார்த்தைகளைக் கூறியதால் அவர் உள்ளே பிரவேசித்தாரென்றும், சொல்லுகிறார். இது எவ்வளவு தூரம் உண்மையென்பது வந்திருந்தவர்களுக்குத் தெரியும். நான் பேசிக்கொண்டிருக்கும் போது யாரும் உள்ளே பிரவேசித்ததாக எனக்குத் தெரியவில்லை. ஊழியனில் இவ்விஷயம் வெளி வந்தபிறகு இந்த சம்பவத்தைப்பற்றி விசாரித்ததில் எனது பிரசங்கத்தின் பிறகு ஸ்ரீ சா. மு. விஸ்வநாதன் பேசிக்கொண்டிருந்த சமயத்தில் முத்துப்பட்டணம் ராம. சுப்பையாவோடு யாரோ ஒருவர் உள்ளே வந்தாரென்றும், அதைத்தவிர வேறு எவ்வித நிகழ்ச்சியும் நடக்கவில்லையென்றும் அறியலானேன்.

நிற்க, இவ்விஷயம்பற்றி சிறிது விளக்க வேண்டியவனு யிருக்கிறேன். திருமணத்திற்கும் அரசியலுக்கும் அவர் கருதுகிறபடி எந்த வழியிலாவது சம்பந்தமுண்டாவென்பது இங்கு குறிப்பிடத்தக்கது. இன்றைய நிலைமையில் திருமணத்திற்கும் அரசியலுக்கும் எவ்வித சம்பந்தமும் இருப்பதாகத் தெரியவில்லை. அரசியலைவிட சீர்திருத்தத் துறையோ, சீர்திருத்தத்துறையைவிட அரசியலோ பிரதானமானதென்று நான் கருதுபவனல்ல. அப்படி நான் அங்கு சொல்லவுமில்லை. இரண்டு துறைகளையும் ஒரே காலத்தில் ஒவ்வொரு ஆணும்பெண்ணும் அனுஷ்டிக்க வேண்டுமென்பதே எனது அபிப்பிராயம். இரண்டும் பிரதானமானவைகளே. சமூகச் சீர்திருத்தத்தில் எவ்வளவுதூரம் அரசியல் வாதிகள் முன்னணியில்நின்று உழைக்கின்றார்களோ, அவ்வளவு சீக்கிரத்தில் நாம் விரும்பும் சுயராஜ்யம் அல்லது சுதந்திரம் கிடைக்குமென்பதில் ஆட்சேபனையில்லை. இன்னொரு விஷயம் என்னவென்றால், ஸ்டாலின் ஜகதீசனுக்குத் துணைநின்ற ஒருவரையும் என்னையும் ஒன்றாகப் பிணைத்து எழுத அந்த நிருபருக்கு என்ன ஆத்திரமோ விளங்கவில்லை.

நிருபரென்பவருக்கு, தான் இன்னதுதான் எழுதலாம், இன்னது எழுதக்கூடாது என்பது தெரியவில்லைபோலிருக்கிறது. நிருபர் என்பவர் நிகழ்ச்சிகளைத்தான் எழுதலாமே தவிர அவரது சொந்த அபிப்பிராயங்களைச் சேர்த்து எழுதுவது, அறிவுக்குப் பொருத்தமானதா என்பதை அவரே ஆழ்ந்து கவனிக்க வேண்டும். சொந்த அபிப்பிராயம் எழுதுகின்ற உரிமை பத்திரிகை ஆசிரியருக்குத்தான் நிருபருக்கல்ல என்பதை அவர் உணர்ந்துகொள்ளவேண்டும். ஆசிரியர் உரிமையில் நிருபர் தலையிடுவதென்றால், ஆசிரியருக்கும் நிருபருக்கும் வித்தியாசமென்ன? ஆகவே தகாதவேலையை, தன் தலைமீது சுமந்துகொண்டு திரிவது நிருபருக்கு அழகல்ல என்று அவருக்கு எச்சரிக்க விரும்புகிறேன்.

—



## காரைக்குடியில் சாக்கடை

காரைக்குடியில், வடக்கு வல்லம்பர் தெரு, முத்துப்பட்டணம் 7-வது வார்டு இரண்டாவது வீதி போன்ற பல இடங்களிலும், இன்னும் பல வீதிகளிலும், சாக்கடைத் தண்ணீர் அதிகமாகத் தேங்கிக்கொண்டிருக்கிறது. காரைக்குடி நகரசபையார் மோட்டார் லாரிகள் மூலம் சாக்கடைத் தண்ணீரை எடுக்கும்படி செய்திருக்கிறார்கள். இந்த லாரிகள் சாக்கடைத் தொட்டிகளிலுள்ள தெளிந்த தண்ணீரை மட்டும் எடுத்துக்கொண்டு போவதால் அடியிலுள்ள சேறு முதலியன இருந்து சுகாதாரக் கேடாக ஒரு கெட்ட நாற்றமும் அடித்துக்கொண்டிருக்கிறது இதிலிருந்து பொது ஜனங்களுக்கு வியாதியை பரவச் செய்கின்றது. ஆகவே காரைக்குடி நகர சபையார் ஒவ்வொரு இடங்களிலும் நன்றாகக் கவனித்து, மோட்டார் லாரிகள் சாக்கடைத் தண்ணீரை எடுத்துக்கொண்டு போனபிறகு கட்டை வண்டிகள்மூலம், உறைந்திருக்கும் சேறு முதலியவற்றை அப்புறப்படுத்தி சுத்திசெய்தல் மிக நலம் என்று ஸ்ரீ சா. மு. விஸ்வநாதன் எழுதுகிறார்.

—





## உள்நாட்டுச் செய்திகள்

### குன்னக்குடி

(காரியதரிசி)

இவ்வூர் கிராம காங்கிரஸ் கமிட்டியின் நிர்வாகக் கூட்டம் ஆகஸ்டு 22-ந் தேதி முற்பகல் 10 மணிக்கு உபதலைவர் ஆர். சடலைமுத்து பிள்ளையவர்கள் தலைமையில். நடைபெற்றது. அகில இந்திய தலைவர் ஸ்ரீஜத் சுபாஷ் சந்திரபோஸ் அவர்கள் தென்னாட்டுக்கு விஜயம் செய்யும்போது இவ்வூரில் கமிட்டியின் சார்பாக வரவேற்பது என்றும், சுற்றுப்பிரயாண திட்டத்தில் குன்னக்குடியையும் சேர்த்துக்கொள்ளும்படி மாகாண கமிட்டி ஜில்லா கமிட்டியையும் ஸ்ரீ. வள்ளியப்பா யம். யல் ஏ. அவர்களையும் கேட்டுக்கொள்ளுகிறது என்றும், 29—7—38 தாலுகா கமிட்டி சுற்றறிக்கையின்படி எண்ணெய், நெய், பால் இவைகளில் கலப்பு சேர்த்து விற்பவர்களின் பேரில் நடவடிக்கை எடுத்துக் கொள்ளுவதென்றும் இது விவரத்தை வர்த்தக சங்கத்தாருக்கு தெரிவிக்கிறதென்றும் 4—9—38-ல் ஸ்ரீஜத் என். எஸ். வரதாச்சாரி அவர்களை கமிட்டின் சார்பில் இங்கு வரவேற்பது என்றும் தீர்மானிக்கப்பட்டது.

O

### திருப்பத்தூர்

(ஒரு நிருபர்)

இவ்வூர் நாகப்பா மருதப்பா போர்டு மிடில் ஸ்கூல் மாணவர் சங்கத்தின் துவக்க கூட்டம் 25-8-38௳ மாலை 6 மணிக்கு வடக்கு இராமநாதபுரம் ஜில்லா போர்டு தலைவர் ஸ்ரீமான் க. வெ. சித. வெங்கடாசலம் செட்டியார் அவர்களின் தலைமையில் நடைபெற்றது. இக்கலாசாலையின் ஆசிரிய மாணவ சங்கத்தார் தலைவருக்கு ஒரு உபசாரப்பத்திரம் வாசித்தளித்தனர். அவ்வமயம் கீழச்சிவற்பட்டி ஸ்ரீமான் R. சுப்பிரமணியய்யர், B A., L.T. அவர்கள் 'மாணவர்களும் தற்கால நோக்கங்களும்' என்பதைப்பற்றி வெகு விரிவாகவும் தெளிவாகவும் பேசினர். இவ்வூர் டிப்டி இன்ஸ்பெக்டர் ஸ்ரீமான் V. இராமச்சந்திரய்யரவர்களும், வீர. சுப்பையா பிள்ளையவர்களும் சொற்பொழி வாற்றினர்கள். ஷை கலாசாலையின் தலைமை ஆசிரியர் ஸ்ரீமான் K. S. வெங்கட சுப்பிரமணியய்யர் வந்தனோபசாரம் கூறியபின் இரவு 8-30 மணிக்கு கூட்டம் இனிது கலைந்தது.

O

### காளையார்கோவில்

(காரியதரிசி)

இவ்வூர் பெற்றோர் சங்கத்தின் சாதாரணக் கூட்டம் ஒன்று 21—8—38௳ இரவு 8 மணிக்கு ஸ்ரீ முத்து. ஆதிமூலம் பிள்ளையவர்களின் தலைமையில் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் வாசகசாலை கட்டிடத்தில் கூடிற்று. பெற்றோர் சங்கத்தின் முயற்சியின் பலனாக பள்ளிக்கூட பிள்ளைகளின் ரோல், ஆஜர் முதலியன மிகவும் அபிவிருத்தியடைந்திருப்பதையும்இன்னும் கல்வியபிவிருத்தி விஷயமாக ஷை சங்கம் கையாள வேண்டிய முயற்சிகளையும் பற்றி ஆலோசிக்கப்பட்டது. இவ்வூரில் பழைய மாணவர் சங்கம் ஒன்று ஏற்படுத்தி அதற்கு நிர்வாகஸ்தர்கள் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். பெற்றோர் சங்கம் பழைய மாணவர் சங்கம் ஆகிய இவற்றின் அபிவிருத்திக்கு சிவகெங்கை ரேஞ்சு டிப்டி இன்ஸ்பெக்டர் அவர்களின் யோசனையைக் கோரி அதன் படியே நடத்தல் என்று ஏகமனதாகத் தீர்மானிக்கப்பட்டது. வந்தனோபசாரத்துடன் கூட்டம் 10-30 மணிக்கு இனிது கலைந்தது.

O

### இராயவரம்

(ஒரு நிருபர்)

21-8-38 மாலை 5-30 மணிக்கு அம்மன் கோவிலுக்கு முன்னால் திரு. V. K. முத்துசுவாமி அய்யரவர்கள் தலைமையில் ஒரு கூட்டம் நடைபெற்றது. "மதுவிலக்கு" என்னும் விஷயம்பற்றி திரு. கு. குப்பான், திரு. சொ. சுவாமிநாத சர்மா, திரு. ரா. பாலசுப்பிரமணியம் பிள்ளை முதலியவர்கள் பேசிய பின் தலைவர் பின்னுரையுடன் இரவு 7-30 மணிக்குக் கூட்டம் முடிந்தது.

O

### கிட்டா செட்டியார்கள் சங்கம்

(காரியதரிசி)

சென்ற ஆடிமாதம் 24 தேதி (8-8-38) திங்கட்கிழமை மாலை 7 மணிக்கு ஷை சங்க நிர்வாக சபைக் கூட்டம் சங்கக் கட்டிடத்தில் தலைவர் திரு. சா. அரு. மெ. வள்ளியப்ப செட்டியாரவர்கள் தலைமையில் நடைபெற்றது. இந்திய சர்க்கார் இன்கம் டாக்ஸ் திருத்தமசோதா விஷயமாய் எல்லா சகோதர சங்கங்களின் பிரதிநிதிகளும் கூடிய சீக்கிரம் ஓர் மத்திய இடத்தில் கூடி கலந்து ஆலோசனை செய்யும் முடிவை சென்னை நாட்டுக்கோட்டை நகரத்தார் சங்கத்திற்குத் தெரிவிப்பது நலமென தீர்மானிக்கப் பெற்று இது விபரத்தை பினுங்கு நாட்டுக்கோட்டை செட்டியார்கள் வர்த்தக சங்கத்திற்கு தெரிவிப்பதென தீர்மானிக்கப் பெற்றது. காரியதரிசியால் வந்தனம் கூறப்பெற்று இரவு 8-15 மணிக்கு கூட்டம் முடிவெய்தியது.

O

### மாங்கொம்பு கிராம காங்கிரஸ் சபை

19-8-38 இரவு 8 மணிக்கு காரியதரிசி கரு. ராமனுதன் வீட்டில் சி. பொன்னையா பிள்ளையவர்கள் தலைமையில் நிர்வாகஸ்தர்களின் கூட்டம் ஒன்று நடைபெற்றது அவ்வமயம் திருப்பத்தூர் தாலூகா நான்காவது அரசியல் மகாநாட்டிற்கு பிரதிநிதிகளாக ஸ்ரீ. பள. காளிமுத்து அவர்களையும் ஸ்ரீ. பள சின்னையா அவர்களையும் தேர்ந்தெடுக்கப் பெற்றது. இவ்வூரில் தர்மப்பள்ளிக் கூடம் அமைத்துக் கொடுக்கும் ஸ்ரீ. மு. கரு. தேனப்ப செட்டியார் அவர்களுக்கு 1-9-38௳ நடைபெறப் போகும் தேனப்பா ஆரம்பப் பாடசாலை திறப்பு விழாவில் உபசாரப்பத்திரம் ஒன்று வாசித்தளிப்பதென்றும் வெள்ளிக்கப் ஒன்று ஞாபகார்த்தமாக வழங்குவதென்றுந் தீர்மானிக்கப் பெற்றது.

O

### தென்மாப்பட்டு

(காரியதரிசி)

கிராம காங்கிரஸ் கமிட்டி:—19-8-38௳ இரவு மணி 10க்கு கமிட்டியின் நிர்வாக கூட்டம் பாரதி வாசகசாலையில் தலைவர் ஸ்ரீ. சுப. மேகவர்ணம் அவர்கள் தலைமையில் நடைபெற்றது இவ்வூரில் மேலத்தெருவில் பொது ஜனங்களுக்கு கிணறு வெட்டித் தரும்படியாக யூனியன் போர்டாரை கேட்டு கொள்வதென்றும் இவ்வூரில் நடக்கும் பாரதி வாசகசாலைக்கு ஒரு தினசரி பத்திரிக்கை சாங்சன் செய்ய வேணுமாய் யூனியன் போர்டாரை கேட்டுக் கொள்வதென்றும் ஏகமனதாக நிறைவேறியது.

### வெற்றியூர்

(காரியதரிசி)

இவ்வூர் திருமகள் வாசகசாலைக் கட்டிடத்தில் ஆகஸ்டு 20-௳ 'தேசிய கலாசாலை' மாணவர்கள் கீதங்கள் பாட ஒரு பொதுக் கூட்டம் ஆரம்பமானது. திரு. நா. நாராயணன் செட்டியார் அவர்கள் தலைமைவகித்தார். தலைவருரைக்குப்பின் (5 வயதுள்ள) S. பழநியப்பன், "புலாலுண்ணலும், பெற்றோர்கள் கடமையும்" எனும் பொருள் பற்றியும், M சுவாமிநாதன், ஆ. இராமநாதன் இவர்கள் முறையே, "சமூக சீர்திருத்தமும், சித்திர வதையும்" "இன்றைய நமது சமூக நிலைமை" எனும் பொருள்கள் பற்றியும், ஸ்ரீமான் ராமலிங்கம் பிள்ளை, S. P. முருகப்பா இவர்கள் "கல்வி" யெனும் பொருள் பற்றியும் சொற்பொழிவு நிகழ்த்தினர்கள். தலைவர் முடிவுரைக்குப் பின் கூட்டம் இனிது நிறை வெய்தியது. பல தனவணிகப் பெரியார்கள் விஜயம் செய்திருந்தது குறிப்பிடத் தக்கது.

O

### ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸ வாசகசாலை

(காரியதரிசி)

21—8—38௳ இரவு 9 மணிக்கு காளையார் கோயில் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸ வாசகசாலையின் மாதாந்தக் கூட்டம் ஸ்ரீ மு. ஆதிமூலம் பிள்ளை அவர்கள் தலைமையில் கூடியது. வாசகசாலையின் இரண்டாவது ஆண்டு விழா நாளது ௴ 19௳ நடைபெறுவதற்கு பசும்பொன் ஸ்ரீ முத்துராமலிங்கத் தேவர் அவர்களை தலைமை வகிக்க கேட்டுக் கொள்ளுவதென்றும், ஆண்டுவிழா செலவுக்காக இவ்வூர் வாசிகளிடம் நிதி வசூலிப்பதென்றும், இவ்வூரிலுள்ள கடைகாரர்களிடம் கடை ஒன்றுக்கு ஒரு நாளைக்கு ஒரு தம்படி வீதம் நிதி வசூலித்து ஷை நிதியை இவ்வூர் கிராம காங்கிரஸ் கமிட்டிக்குப் பாதியும் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸ வாசகசாலைக்குப் பாதியுமாக வைத்துக்கொள்ளுவது என்றும், வாசகசாலைக்கு தினமணி, குமரன், ஆனந்த விகடன், தமிழ் மணி, ஊழியன், நவசக்தி முதலிய ஆறு பத்திரிகைகளையும் வாசகசாலையின் நிதியிலிருந்தும் சந்தா வசூலிலிருந்தும் வரவழைப்பதென்றும் ஏகமனதாக தீர்மானிக்கப்பட்டு வந்தனோபசாரத்துடன் கூட்டம் இரவு 10 மணிக்கு இனிது முடிந்தது.

## விஞ்ஞானம்

### தானே அடைக்கும் கதவு

பனி அல்லது மழை பெய்ய ஆரம்பித்ததும், தானே அடைத்துக்கொள்ளும் கதவுகளும் ஜன்னல்களும் பெர்லின் வீடுகளில் அமைக்கப்பட்டிருக்கின்றன.

★

### குடையில் டார்ச்

தாமஸ் கார்மடி என்பவர், குடைக் கம்பு நுனியில் எலக்டிரிக் டார்ச் வைத்த குடையை 'பேடண்ட்' செய்திருக்கிறார். இருட்டு வேளைகளிலும், தெருக் கடக்கும் போதும் இந்த லைட் மிகவும் உபயோகமாக இருக்கும்.

★

### கண்ணுடியில் 5 கலர்

கண்ணுடிபுட்டி, ரப்பர் பந்து, தகர டப்பிகள் முதலிய பல உருண்டை வடிவான சாமான்கள் மீது ஐந்து வர்ணத்தில் அச்சிடும் இயந்திரமொன்றை ஒரு ஜப்பானியர் செய்திருக்கிறார். மணிக்கு 600 பிரதி ஐந்து கலர்களிலும் அச்சிட முடியுமாம்.

★

### சுருங்காத கம்பளம்

ஆட்டு ரோமம் சுருங்காதிருக்கச் செய்யும் முறையொன்றை ஒரு ஆங்கிலேயர் கண்டுபிடித்திருக்கிறார். பல வருஷங்களாகச் சோதனைகள் நடத்தியஅவர்முடிவில் வெற்றி பெற்றிருக்கிறார். ஒரு மணி நேரம் மருந்து கலந்த தண்ணீரில் கம்பளத்தை அமுக்கி வைத்திருப்பதே இம்முறை.

★

### தலைக்கு 5000 பவுன்

உலகப் பேரறிஞரான பெர்னுட்ஷாவின் தலைக்கு, லங்காஷயரிலுள்ள ஒரு தனவந்தர் 5000 பவுன் விலை கொடுக்க முன்வந்தார். ஷாவின் தலையை ஸர்ஜன்களின் ராயல் காலேஜுக்குக் கொடுத்து விட வேண்டுமென்று அவர் கேட்டுக் கொண்டார். பெர்னுர்டு ஷாவின் மூளையைப் பரிசோதித்து அறிய வேண்டுமென்று அவர் விரும்பினர். ஆனால், இந்த ஒப்பந்தத்துக்கு பெர்னுர்டு ஷா இணங்க வில்லை.

★

### டெலிவிஷனும் ரேடியோவும்

ஒலிம்பியா ரேடியோ பொருட் காட்சியில் டெலிவிஷனும் ரேடியோவும் அடங்கிய ஒரு செட் வைக்கப்பட்டிருக்கிறது. இதன் அளவு 18 அங்குலம் நீளமும், 23 அங்குலம் உயரமும்தான். இதில் சப்தத்தைக் கேட்பதுடன் பேசுபவர் அல்லது பாடுபவரின் உருவத்தையும் பார்க்க முடியும். படம் காட்டும் திரையின் குறுக்களவு 5 அங்குலம்தான். விலை சுமார் 400 ரூபாய் தானுகிறதாம்.

★

### ஒட்டு நரம்பு

சீன யுத்தத்தில் துப்பாக்கி குண்டு பாய்ந்ததால் ஒரு ஜப்பானிய வீரனுடைய கை நாடி நரம்பு அறுபட்டு கை உபயோகமற்றதாகி விட்டது. ஜப்பானிய டாக்டர்கள்-மிக அற்புதமான ஒரு ஆபரேஷனை நடத்தி கையைக் குணப்படுத்திப் பழய நிலைக்குக் கொண்டு வந்து விட்டார்கள். ஒரு குழிமுயலின் முது கெலும்புப் பக்கத்திலுள்ள நரம்பினுல், போர் வீரனுடைய கையில் அறுபட்ட நரம்புகளை இணைத்து ஒட்டவைத்து விட்டார்கள். ஒரு சில நாட்களில் அவன் தன் கையை முன்போல் அசைக்க முடிந்துவிட்டதாம்.

★

### கீல் தூசி

கன்னப்புத்து முதலிய பிளவைகள் உண்டாவதற்கு, ரோட்டுகளின் கீல் தூசி முக்கிய காரணமென பிரஞ்சு டாக்டர் ஒருவர் கூறுகிறார். இவர் சென்ற எட்டு வருஷ காலமாக இத்துறையில் பல ஆராய்ச்சிகள் செய்து இந்த முடிவுக்கு வந்திருக்கிறார். சென்ற பதினைந்து வருட காலமாக பிரான்ஸிலும் இதர தேசங்களிலும் தூசி பறக்கவொட்டாமல், ரோடுகளுக்குக் கீல் போடுகிறார்கள். இந்தக் கீலிலிருந்து கிளம்பும் புகை மனிதர்களுடைய நரலில் புகுந்து பிளவைகள் உண்டாக்க ஏதுவாகின்றன என்று அவர் கூறுகிறார்.

## நாடகத்தில் சர்வாதிகாரிகள்!

### 'ஜினிவா' நாடகம்

ஜார்ஜ் பெர்னுர்டு ஷா சமீபத்தில், இயற்றிய 'ஜினீவா' எனும் நாடகம் இன்றைய உலகநிலைமையை நன்குஉருவகப்படுத்திக் காண்பிக்கின்றது. சர்வதேச சங்கத்தின் சக்தியின்மையும், சர்வாதிகாரிகளின் ஆர்ப்பாட்டங்களும் இதில் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன.

முஸோலினிக்கு இந் நாடகத்தில் ஸிக்னர் பம்பார்டன் என்று பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஹெர் ஹிட்லருக்குப் பதில் ஹெர் பாட்லர். ஜெனரல் பிராங்கோ ஜெனரல் பிலாங்கோவாக மாறுகிறார்.

ஜினிவா ஆபீஸில் ஒரு அழகிய பெண் யஜமானியாக உட்கார்ந்திருக்கிறாள். ஒரு புது ஆள் நுழைந்து 'நான் ஒரு யூதர்' என்று சொல்கிறான். ஹெர் பாட்லர்மீது கடுமையான குற்றச் சாட்டுகளைக் கூறி அவற்றை சர்வதேச நீதிமன்றத்தின் முன்பு எடுத்துக்கூற விரும்புகின்றான். அவன் கூறிய விவரமனைத்தையும் பொறுமையுடனும் இனிய சாங்கோலட்களை மென்று கொண்டும் கேட்டுக்கொண்டிருந்துவிட்டு முடிவில் 'கவலைப் படாதே. நான் கவனித்துக் கொள்கிறேன்' என்று கூறி அனுப்பிவிடுகின்றாள்.

அடுத்தபடியாக பிரிட்டிஷ் பிஷப் ஒருவர் நுழைந்து பொதுவுடமையின் கொடூரச் செயல்களை யெடுத்துக்கூறுகிறார். அவர் பாதி சொல்லுமுன்பு ருஷிய அதிகாரி ஒருவர் உள் நுழைகிறார். பிஷப், யாரென்று கவனியாமலே அவரை வரவேற்கிறார். தான் ஒரு பொதுவுடமை வாதியுடன் கை குலுக்கிவிட்டதை உணர்ந்ததும் பயத்தால் நடுங்கி அப்படியே மூர்ச்சையாகி விடுகிறார். மூர்ச்சை தெளிந்ததும், ரஷ்ய வீரருக்கும் பிஷப்புக்கும் வாக்குவாதம் நடைபெறுகிறது. 'பிஷப் பிரபு அவர்களே! ருஷ்யாவில் ஏழைகளில்லை' யென்று ருஷ்ய அதிகாரி சொன்னதும் பிஷப் பயந்து, அந்த நடுக்கத்தாலேயே உயிர் விட்டு விடுகிறார்.

கதையின் இன்னொரு கட்டம். அந்தப் பெண்மணி ஜினிவா, மூன்று குற்றவாளிகள் மீதும் கொண்டுவரப்பட்ட குற்றச் சாட்டுகளை சர்வதேச விசாரணைக் கோர்ட்டுக்கு அனுப்புகிறாள். விசாரணை ஆரம்பமாகிறது; விவாதங்கள் நடக்கின்றன. விவாதம் முழுவதும், ரேடியோ மூலம் உலகம் முழுமையும் பரப்பப் படுகின்றது. ஹெர் பாட்லரிடம் கிறிஸ்து மூலமே உலகில் சமாதானத்தை நிலைநாட்ட முடியுமென்று ஒரு பெண்மணி சொல்கிறாள். விவாதத்தின் இடையில்கிரீன்விச்சிலிருந்து டெலிபோன் காள் வருகிறது; உலகத்தைச் சுற்றி பனிப்படலம் சூழ்ந்து வருவதாக கிரீன்விச்சிலிருந்து ஜட்ஜிக்குத் தெரியப்படுத்தப்படுகிறது. கடைசி நாள் வந்ததையறிந்த பாட்லர் அழுகிறார்—மனித சமூகம் அழிந்து விடுமே யென்ற வருத்தத்தாலல்ல; ஆனால், தனது அருமை நாய் குளிரால் மாண்டு விடுமே யென்றுதான். ஒலிபெருக்கி குளிரால் உயிரற்றுப் போகிறது. கோர்ட்டு அறையும் காலியாகிவிட்டது. எங்கும் ஒரே குளிர். மனிதன் இந்தப் பரந்த உலகில் ஒன்றுமில்லாததற்குச் சமம்தானென்றும், கடவுள் தன் கைக்குள் இவ்வுலகத்தையே அடக்கி வைத்திருக்கிறுரென்றும் உணர்ச்சி பார்ப்போருள்ளத்தில் பதியுமாறு நாடகாசிரியர் கதையை முடிக்கிறார். கிரீன்விச் செய்தி வெறும் புரளி யென்று முடிவில் தெரிகிறது.

## உலகத்துக்கு ஒரு பாஷை

### லண்டனில் மகாநாடு

பல தேசங்கள்—ஆனுல் ஒரே பாஷை. சென்ற வாரம் லண்டனில் நடைபெற்ற ஒரு மகாநாட்டில் இவ்வாறு தீர்மானிக்கப்பட்டது. அகில உலக எஸ்பரண்டோ 30வது மகாநாட்டில், சர்வ உலகத்துக்கும் ஒரே பாஷையாக, 1887ல் டாக்டர் ஸாமன்ஹாப் என்பவரால் தயாரித்து வெளியிடப்பட்ட அந்தபாஷை பேசுபவர்கள் சுமார் 1600 பேர் விஜயஞ் செய்திருந்தனர். முப்பது தேசப் பிரதிநிதிகள். இம் மகாநாடு லண்டனில் கூடுவது இதுதான் முதன்முறை.

எஸ்பரேண்டோ பாஷை பிரிட்டனில் அதிகச் செல்வாக்கைப் பெற்று வருவதாகத் தெரிகிறது. அனேக பள்ளிக் கூடங்களில் இதை ஒரு பாடமாக உத்யோக முறையில் வைத்திருக்கிறார்கள். ஆனுல் இவ்விஷயத்தில் பிரிட்டன் ஹாலந்துடன் போட்டியிட முடியாது. அங்கு தபால் ஆபீஸ்களிலும், ரயில்வே ஸ்டேஷன்களிலும் எஸ்பரேண்டோ பேசுபவர் இருக்கின்றனர். ஹேகில் டெலிபோன் விதிகள் அந்த பாஷையில் அச்சிடப்பட்டிருக்கின்றன. பிரான்ஸில், ரோடுகளில் நிறுத்தப்பட்டிருக்கும் வழிகாட்டி மரங்களில் எஸ்பரெண்டோ பாஷையில் எழுதியிருக்கிறார்கள், ஐரோப்பிய ரேடியோவில் இப்பாஷை அதிகமாக உபயோகிக்கப்படுகின்றது.

## நோட்டீஸ்

### சிவகெங்கை டி. மு. கோர்ட்டு

1938ஞு S. C. No. 199

கேமம். ப. ஷண்முகம் பிள்ளை } வாதி

வளனே. அருணஜல அம்பலம் மகன் நரசிங்க அம்பலம் } பிரதிவாதி

வாதிக்கு பிரதிவாதி ரூ. 44–0–0க்கு 11–3–35உயில் எழுதிக் கொடுத்திருக்கிற நோட்டின்பேரில் ரூ. 54–12–6க்கு வியாஜியம் செய்து 24–9–38உ வாய்தா யேற்பட்டிருக்கிறது. ஆக்ஷேபணையிருந்தால் வாய்தாவன்று ஆஜராகி தெரிவித்துக்கொள்ள வேண்டியது.

29–8–38. } ஆர். நடராஜன், வக்கீல்.

### கி. கா. கமிட்டி திறப்புவிழா

ஆகஸ்டு 26உ பிற்பகல் 4-மணிக்கு வெற்றியூர் திருமகள் வாசகசாலைக் கட்டிடத்தில் காங்கிரஸ் கமிட்டி பிரசாரகர் திரு. கே. கிட்டு ஐயர் தலைமையில் காங்கிரஸ் கமிட்டி அமைக்கப்பட்டது. ஸ்ரீமான் கதி. நாராயணன் செட்டியார் தலைவராகவும், மா. மெய்யப்பா காரியதரிசியாகவும், தேர்ந்தெடுக்கப்பட்டனர். 6 மணிக்கு திரு. கதி. நா. நாராயணன் செட்டியார் தலைமையில் பொதுக்கூட்டம் ஒன்று நடைபெற்றது.

### 'கமிஷனர்கள் வேண்டாம்'

மாகாண நகரசபை சேர்மன்கள், வைஸ் சேர்மன்களின் மகாநாடு சென்னை ரிப்பன் மண்டபத்தில் ஆகஸ்டு 21 உ காலை நடைபெற்றது. நகரசபைகளில் கமிஷனர் பதவிகளை யெடுத்து விடவேண்டு மென்றும் நகரசபைகளுக்கு அதிக அதிகாரம் கொடுக்க வேண்டுமென்றும் தீர்மானிக்கப்பெற்றது.

### 'ராக்ஷஸ'ப் பிரயாணி

ஒரு பிரஞ்சுக் கப்பலின் தலைவர் ஒரு பெரிய சோதனைக்குட்பட்டார். ஹென்ரி ஹைட் என்னும் ஏழேமுக்காலடி மனிதர் நியுயார்க்கில் கப்பலேறியபோது, கப்பல் காப்டனுக்குக் கஷ்டமேற்பட்டது. இந்த பிரயாணி தூங்குவதற்கு வசதி செய்வது கஷ்டமாகி விட்டது. எனவே, இரண்டு அறைகளுக்கும் நடுவேயுள்ள சுவரில் துவாரமிட்டு, அந்த 'உயரிய' பிரயாணி ஒரு அறையில் தலையும் இன்னெரு அறையில் காலுமாக வைத்துத் தூங்கும்படி நேரிட்டது.







நம் இந்தியாவில் எல்லாச் சீர்திருத்தங்களும் அநேகமாய் கவர்ன்மெண்டினுலேயே கொண்டு வரப்பட்டிருக்கின்றன. கூட்டுறவுஇயக்கமும் அவ்வாறேதான். சாதாரணமாக மக்களிடை ஒரு கூட்டுறவு உணர்ச்சி ஏற்பட்டு சில சில காரியங்களுக்கு கூட்டுறவு ஸ்தாபனங்களை ஏற்படுத்திக் கொள்ள முன் வருவதே, இயற்கைக் கூட்டுறவாகும். அவ்வாறு மனப்பான்மை வரவேண்டுமாயின் மக்களிடையே நல்ல கல்வி அபிவிருத்தியும் அநுபவப் பயிற்சியும் ஏற்கனவே இருத்தல் அவசியம். எல்லாத் தொழில் முறைக்கும் இவ்விரண்டும் முக்கிய தேவை. கூட்டுறவும் ஒரு தொழில் முறையாதலால் அதற்கு இவ்விரண்டும் முக்கிய தேவையாகின்றன.

இந்தியாவில் இவை இரண்டும் ஏற்கனவே பரவியிருந்தன வென்று சொல்ல இயலாது. கூட்டுறவு இயக்கத்தினபிவிருத்திக்குப் பாதகமாக பல சமூக சம்பந்தமான, கல்வி சம்பந்தமான இன்னும் இதர தடங்கல்கள் இருந்தன. ஆயிரக்கணக்கான வருடங்களாக இருந்த பழக்க வழக்கங்களும் மிகப் பெரும்பாலான பொது மக்களிடையே படிப்பின்மையும், ஜாதி சமய பேதங்களும் வேற்றுமையை எவ்வளவு அபிவிருத்தி செய்ய வேண்டுமோ அவ்வளவும் செய்துவிட்டன.

சென்ற 30 வருடங்களாக சமூக, அரசியல் விஷயங்களில் நம்நிலைமையை மாற்ற சர்க்காரால் பலவித நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட் டிருந்தும், கூட்டுறவு இயக்கத்திற்கு இன்றியமையாதவைகளாக முன்னர் கூறிய நல்ல கல்வி அபிவிருத்தியும் அநுபவப் பயிற்சியும் இன்னும் வந்தபாடில்லை என்றே எனக்குத் தோன்றுகிறது. பொது ஜனங்களிடை படிப்பின்மை இன்னும் தாண்டவமாடிக் கொண்டிருக்கிறது. 1931ம்வருஷத்திய ஜனகணிதப்படி படித்தவர்களின் தொகை நூற்றுக்கு 8 விகிதமே யாகிறது. ஆடவர்களைமட்டும் எடுத்துக் கொண்டால் 14 சத விகிதமும் பெண்களை மட்டும் எடுத்துக் கொண்டால் 2 சத விகிதமும் ஆகிறது. அதுவுமன்னியில் கூட்டுறவு இயக்கத்தில் முக்கிய அம்சமாக இருக்கும் பெண் மக்கள் படிப்பின்மை காரணமாக இவ்வியக்கத்தில் இதுவரை சேரவேயில்லை. இதுவே நாட்டுப் புறங்களின் நிரந்தர நிலைமையாக இருக்கிறது. இந்த நிலைமை மாறும்வரை, கூட்டுறவு இயக்கத்திற்கு இடம் ஏதும் இருக்கிறதா என்று சிந்திப்பதற்கும் இடமில்லை.

## இந்தியாவில் கூட்டுறவு இயக்கம்

[இந்தியாவில் கூட்டுறவு இயக்கம் தோன்றி முப்பதாண்டுகளாகின்றன. எனினும் அது நன்கு வேரூன்றி பலப்பட்டதாகச் சொல்ல முடியாது. இதற்கு, சாதி வேற்றுமை, அறியாமை, பழக்க வழக்கங்கள், கல்விக் குறைவு முதலிய பல காரணங்கள். இந்த இயக்கம் நம் நாட்டில் வெற்றிபெறச் செய்வது எப்படி என்பதை விளக்கி, பரோடா சமஸ்தான கூட்டுறவு சங்கங்களின் ரெஜிஸ்திரார் திரு. ஆர். ஆர். பாவார், 'இந்தியன் கோவாப்பரேட்டிவ் ரிவ்யூ'வில் வரைந்துள்ள கட்டுரையின் மொழிபெயர்ப்புகீழே வெளிவருகிறது.]

★

இதற்கு விமோசனந்தான் என்ன? சர்க்கார்தான் வேண்டியவற்றைச்செய்யவேண்டுமென்று விட்டுவிட்டால் இப்போதைய நிலைமை மாற பல நூற்றுண்டுகள் செல்லும். அப்போதும் மாறிவிடும் என்று நிச்சயமாகக் கூறுவதற்கில்லை. கவர்ன்மெண்டாருடன் சேர்ந்து உழைக்க நிதியும் நேரமும் வாய்ந்த தலைவர்களே முன்வரவேண்டும். ஜனங்களிடை படிப்பின்மையைப் போக்க ஒரு இலகுவான பொதுஜன படிப்பு முறையை வகுக்க வேண்டும். பலர் பலவிதமான யோஜனை கூறுகின்றனர். சர்க்காரின் உதவியைக்கொண்டு விரிவான ஒரு திட்டம் தயாரிக்கப்பட வேண்டும்.

படித்தால்தான் அறிவும் திறமையும் ஏற்படுகிறதா? படிப்பில்லாத பலர் தொழிலிலும் வியாபாரத்திலும் சிறந்த அநுபவத்துடன் இருக்கவில்லையா என்று கேட்கலாம். படிப்பு, பயிற்சி இவ்விரண்டின் முக்கியத்தை என்றும் அசட்டை செய்ய இயலாது. ஒவ்வொரு ஆடவனும் பெண்ணும் எழுதப் படிக்கத் தெரிந்திருப்பின், எழுதுவதிலும் சிந்தனையிலும் தன் மனோசக்தியை அபிவிர்த்தி செய்ய வெகு சுலபமாக இருக்கும். ஆகையால் கூட்டுறவு இயக்கம் முன்னேற வேண்டுமாயின் இந்திய பொதுமக்களிடை படிப்பின்மை இல்லாது ஒழியவேண்டியது முதல் தேவை.

இரண்டாவது, சில சமூக நிர்ப்பந்தங்கள் ஒழியவேண்டும். முக்கியமாக கலியாணக் காலங்களிலும், ஈமக்கடன்களைச் செய்யும் காலங்களிலும் சமய சமூகக் கட்டுப்பாடுகளுக்கிசைய, பெருந்தொகைகளைக் கடன் வாங்கியாவது ஆடம்பரமாகச் செய்கிறார்கள். கிராமங்களில் இம்மாதிரியான கடன் தொல்லை முற்றியிருக்கிறது. இந்த நிர்ப்பந்தங்கள் தொலைய வேண்டும். இக்காரணங்கள்பற்றி கடன் வாங்கும் கொடிய வழக்கமும் நிற்கவேண்டும். சமூக வித்தியாசங்கள் தலைதூக்கி நிற்கும் இந்நாட்டில் கூட்டுறவு என்பது கடைத்தேறுமா என்றுகூட சில சமயம் தோன்றும். கூட்டுறவு என்பதும் சமூகப் பிரிவுகளும் ஒன்றிற்கொன்று முரண்பாடானவை. ஜாதி சமயங்களால் வேறுபட்டவர்கள் வெவ்வேறான கொள்கைகளையும் நோக்கங்களையும் கொண்டவராயிருக்கின்றனர். கூட்டுறவு விருத்தியடைய அடைய இவ்வேற்றுமை மனப்பான்மை மறையும் என்று எதிர்பார்த்த வண்ணம் நடக்கவில்லை. கூட்டுறவு இயக்கந்தான் பின்னடைந்திருக்கிறது.

இவ் வடிப்படையான தடங்கல்கள் ஒழிய வேண்டும். கூட்டுறவு மனப்பான்மை வேரூன்றவேண்டும். இதற்கு கவர்ன்மெண்டார் நல்ல திட்டம் ஒன்று வகுக்கவேண்டும். தகுதியுள்ள தலைவர்கள் ஒத்துழைக்க முன்வர வேண்டும். இதுவே சரியான சமயம்.

### இதர தேசங்களில்

ஸோவியத் ருஷ்யாவில் கூட்டுறவு இயக்கத்தில் மெம்பர்கள் தொகை 7 கோடி 19 லட்சம்.

இதரதேசஙகளில் $1\frac{1}{2}$ கோடி.

## ஒ. சிறுவயல்

(ஒரு நிருபர்)

**பள்ளிக்கூடம்:**—ஆகஸ்டு 28உ காலை 9-மணிக்கு இவ்வூர் ஸ்ரீ பொன்னழகிதேவி கோவிலில், வட இராமனுதபுரம் ஜில்லா போர்டு பிரஸிடெண்டு ஸ்ரீ மான் க. வெ. சித. வெங்கிடாசலம் செட்டியார் அவர்கள், ஜில்லாபோர்டு ஆரம்பப் பாடசாலையைத் திறந்து வைத்தார்கள். நகரத்தார் சார்பாக ஸ்ரீமான் அள. லெ. காசிச் செட்டியார் அவர்கள் கனம் பிரஸிடெண்டு அவர்கட்கு ஒரு உபசாரம் பத்திரம் படித்துக் கொடுத்தார்கள். ஸ்கூல் டிப்டி இன்ஸ்பெக்டர் ஸ்ரீ வி. இராமச்சந்திரய்யர் அவர்கள் பி. ஏ. எல். டி., பெற்ருேர்கள் சங்கத்தை ஆரம்பித்து வைத்தார்.

**எலக்டிரிக் சங்கு:**—28—8—38 மாலை 6-மணிக்கு ஸ்ரீ அம்மன் கோவில் ஊரணித் தர்மகர்த்தாவும் பிரபல தனவந்தருமான ஸ்ரீமான் மு. அரு. அருணுசலம் செட்டியார் அவர்கள் ஊரணி படித்துறைகளில் 8 டும் லைட்டுகளும் ஒரு எலக்டிரிக் சங்கும் ஸ்தாபித்து அதனைத் திறந்துவைப்பதற்காக வட இராமநாதபுரம் ஜில்லா போர்டு பிரஸிடெண்ட் கனம் சி. வி. சி. டி. வெங்கடாசலம் செட்டியார் அவர்களை மலர்மாலை சூட்டி அழைத்துவந்து ஒரு உபசாரப் பத்திரம் வாசித்தளித்தார்கள். கனம் வெங்கிடாசலம் செட்டியார் அவர்கள் ஸ்தாபகரைப் புகழ்ந்து இம்மாதிரி யென்றும் அழியா தருமத்தை செய்ததோடு அதன் நிர்வாகத்தைப்பொருளோடு காணுடுகாத்தான் எலக்டிரிக் கார்பரேஷனில் ஒப்படைத்தது போற்றத்தக்கது என்றும், செட்டிமார் நாட்டில் திருப்பத்தூர் தாலுகா கிராமங்களில் இது 2-வது சங்கு என்றும், இது பலர் சவுகரியத்துக்கும் தினம் 3 முறை கோஷிக்குமென்றும் விரிவாகப் பேசி சங்கு விளக்குகளைத் திறந்து வைத்தார்கள். கனம் அருணுசலம் செட்டியார் அவர்கள் வந்தனோபசாரம் கூறி வந்திருந்தோர்களுக்கு சந்தனம் புஷ்பம் கூல்ட்ரிங் முதலியன வழங்கப்பெற்று வைபவம் முடிவு பெற்றது.

○

## ஜெயங்கொண்டபுரம் சரோஜனி வாசகசாலை

முதலாவதாண்டு நிறைவுவிழா:—நிகழும் ஆவணி 13 (29-8-38) ம் நாள் திங்கட்கிழமை மாலை 3 மணிக்கு தலைவர் வரவேற்பு ஊர்வலம் பாண்டுவாத்தியங்களுடன் புறப்பட்டு ஊரைப் பொட்டலுக்குச் சென்றது. அங்கு ஸ்ரீ சா. கணேசன் அவர்கள் கொடியேற்றுவித்து சொற்பெருக்காற்றினர்கள். குரூப் போட்டோ ஒன்று எடுக்கப்பட்ட பின்னர் ஊர்வலம் முரு. மெ. அவர்கள் இல்லத்தை அடைந்ததும் ஸ்ரீ மெ. ராம. மெ. மெய்யப்ப செட்டியார் அவர்கள் தலைமையில் வாசகசாலையின் முதலாவதாண்டு விழா ஆரம்பமாயிற்று. நகரத்தார் பள்ளிக்கூடத்து மாணவிகள் நாட்டு வாழ்த்துப் பாடினர்கள். காரியதரிசி ஸ்ரீ அரு. ராம. சித. ராமசாமி செட்டியாரால் அறிக்கை வாசிக்கப்பெற்றதும் தலைவர் அவர்கள் முன்னுரை கூறினர்கள். பின்னர் ஸ்ரீமான்களான ராம. சிதம்பரம் அவர்கள் "திருந்திய வாழ்வு" என்பது பற்றியும், சா. கணேசன் அவர்கள் "அமுணர்ந்த அருந்தமிழர்" என்பதுபற்றியும், நகரசபை தலைவரும் தேசபக்தருமான ஸ்ரீ ராய. சொக்கலிங்கன் அவர்கள் "இலங்கை வீரன்" என்பது பற்றியும் விரிவாகவும் அழகாகவும் பேசினர்கள். தலைவர் முடிப்புரை, நன்றி கூறுதலுக்குப் பின் இரவு 8-30 மணிக்கு எல்லோருக்கும் விருந் தளிக்கப்பெற்று விழா இனிது நிறைவேறியது என காரியதரிசி அறிவிக்கிறார்.



# :: உள்நாட்டுச் செய்திகள் ::

## மு. சூரக்குடி

(ஒரு நிருபர்)

ஆகஸ்டு 21உ இரவு 7 மணிக்கு காரைக்குடி ஜில்லா காங்கிரஸ் பிரசாரகர் திரு கே. கிட்டு அய்யர் தலைமையில் இவ்வூர் காங்கிரஸ் அங்கத்தினர்கள் கூடி கிராம காங்கிரஸ் கமிட்டி அமைத்தனர். ஸ்ரீ மெ. சின்னய்யா அம்பலம் தலைவராகவும் ஸ்ரீ அள. செல்லய்யா சேருவை காரியதரிசியாகவும் இதர நிர்வாகஸ்தர்களும் தெரிந்தெடுக்கப்பட்டனர்.

○

## சொக்கநாதபுரம்

நாளது ஆவணி 20உ (5—9—38)ல் இவ்வூர் பெரி. முத்து. மு. முத்தையா செட்டியாரவர்களுக்கு அவர்களது இல்லத்தில் சஷ்டி அப்த பூர்த்தி சாந்தி கல்யாணம் நடைபெறும். அன்று மாலை 3 மணிக்கு மைசூர் ஸ்ரீமதி பால பாரதியது கிரி குமாரியால் (ராமதாஸ் சரித்திரம்) ஹரிகதாகாலக்ஷேபமும் இரவு பஞ்ச மூர்த்திகளின் திருவுலாவும் அதில் திருவெண்காடு ஸ்ரீ சுப்பிரமணியம் பார்ட்டியின் நாதசுரக் கச்சேரியும் நடைபெறுமென்று ஒரு நிருபர் தெரிவிக்கிறார்.

○

## பாரதி விழா

தேவகோட்டை பாரதி சங்கத்தாரால் தேசிய தமிழ் மஹா கவி ஸ்ரீ சுப்பிரமணிய பாரதி விழா டை சங்கத்தில் 11—9—38 கொண்டாடப்படும். ஊர்வலம், பொதுக்கூட்டம் பாரதி பாடல்களை திறமையுடன் பாடுவோருக்கு பரிசு அளித்தல் முதலிய நிகழ்ச்சிகள் நடைபெறும்.

## சிவகங்கை

(நமது நிருபர்)

பொதுக்கூட்டம்:—சிவன்கோவில் முன்பாக 25—8—38உ மாலை 7-மணிக்கு ஸ்ரீமான் ஜே. ஸி. குமரப்பா (கிராமக்கைத்தொழில் காரியதரிசியவர்கள்) கிராமக் கைத்தொழில் என்னும் விஷயம் பற்றியும் ஆங்கிலத்தில் வார்தா திட்டத்தைப் பற்றியும் சொற்பொழிவாற்றினர்கள். அவ்வமயம் ஸ்ரீமான் எஸ். எம். நாராயண அய்யங்காரவர்கள் தலைமை வகித்தார்கள்.

○

## நாட்டரசன் கோட்டை

மகா கும்பாபிஷேகம்:—இவ்வூர் ஸ்ரீ கண்ணுடையநாயகி அம்மனுக்கும் பரிவார தேவதைகட்கும் நாளது ஆவணி ௴ 27உ (12—9—38) திங்கட்கிழமை பகல் 12-30 க்குமேல் 1-30 மணி அளவில் அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் நடைபெறும். அன்றிரவு ஸ்ரீ அம்பாள் வெள்ளி ரதத்தில் ஆரோகணித்து வரும் திருவுலாக் காக்ஷியும் பிரபல நாதஸ்வரக் கச்சேரி, பரதநாட்டியக் கச்சேரிகளும் நடைபெறும்.

○

## அமராவதிபுதூர்

31-8-38 காலை 11-30 மணிக்கு வாலிபர் சங்கக் கட்டிடத்தில் "செட்டியார் சமூக சீர்திருத்த இளைஞர் சங்கம்" ஸ்ரீ வி. பரமசிவம் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. ஸ்ரீ ஆக. கண்ணப்பன் அவர்கள் தலைவராகவும், ஸ்ரீ சுப. சோமசுந்தரம் காரியதரிசியாகவும் இதர நிர்வாகஸ்தர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.



## விவாகம்

கூழிபிறை ஸ்ரீமான் மு. ராம. ராமநாதன் செட்டியாரவர்கள் பௌத்திரன் திருவளர் செல்வன் ராமநாதனுக்கும், ஷையூர் ஸ்ரீமான் நா. ராம. ராமநாதன் செட்டியாரவர்கள் குமாரத்தி திருவளர் செல்வி ராகம்மைக்கும் நாளிது ஆவணி 12உ ஞாயிற்றுக்கிழமை திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

○

## செட்டியார் நலஉரிமைச்சங்கம்

ஆகஸ்ட்டு௴ 31உ காலை 9-45 மணிக்கு காரைக்குடி செட்டியார்கள் நல உரிமைச் சங்கத்தின் மகாசபைக்கூட்டம் திரு. சுப. வெ. வெங்கடாசலம்செட்டியார் அவர்கள் தலைமையில் கூடியது. புது வருடத்திற்கு திரு. அள. கரு. அடைக்கப்ப செட்டியாரை தலைவராகவும் திரு. ஆரு. பள. சி. பள. சிதம்பரம் செட்டியாரை உபதலைவராகவும் திரு. கரு.சொ. பழனியப்ப செட்டியாரை காரியதரிசியாகவும் திரு. ஆமு. ஆரு. பழனியப்ப செட்டியாரை உதவி காரியதரிசியாகவும் தேர்ந்தெடுக்கப்பெற்றது. இதர நிர்வாக சபை அங்கத்தினர்களும் தேர்ந்தெடுக்கப்பெற்று கூட்டம் நிறைவேறியது என்று காரியதரிசி கரு. சொ. பழ. அறிவிக்கிருர்.

## ஆசிரியர் மானேஜர்களின் மஹாசபைக் கூட்டம்

திருப்பத்தூர் ரேஞ்சு ஆரம்ப ஆசிரியர், மானேஜர்களின் மஹாசபைக் கூட்டம் காரைக்குடி மகர்நோம்பு பொட்டல் எய்டெட் ஸ்கூலில் 27-8-38 மாலை 5 மணிக்கு தேவகோட்டை முனிசிபல் வைஸ் சேர்மன் ஸ்ரீமான் பொ. திரிகூடசுந்தரன் M. A. B. L. அவர்கள் தலைமையில் கூடியது. சங்கத்தலைவரும், திருப்பத்தூர் ரேஞ்சு டிப்டி இன்ஸ்பெக்டருமான ஸ்ரீமான் V. இராமச்சந்திர அய்யர் B. A, L. T. அவர்களும் இதர ஆசிரிய மானேஜர்களும் விஜயம் செய்தனர். ஆரம்ப ஆசிரிய மானேஜர்களின் சங்க அபிவிருத்திக்காகவும் கல்வி அபிவிருத்திக்காகவும் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. மிஷன் பாடசாலை மானேஜர்களல்லாத இதர மானேஜர்களின் சங்கம் ஒன்று தனிப்பட திறந்து வைக்கப்பட்டு நிர்வாகஸ்தர்கள் நியமனம் செய்வதற்காக கோ. அழகாபுரி அழகியதேவி எலிமெண்டரி ஸ்கூல் மானேஜர் திரு. CT. A. CT. நாச்சியப்ப செட்டியாரவர்களும் கல்லுப்பட்டி மெய்யப்பா எலிமெண்டரி ஸ்கூல் மானேஜர் P. L. M. முத்தையா செட்டியார் அவர்களும் கன்வீனர்களாக ஏகமனதாக தேர்ந்தெடுக்கப் பட்டார்கள். தலைவர் அவர்கள் ஆரம்ப ஆசிரியர்களுக்கு வேண்டிய பல நீதிகளை எடுத்துக் கூறியதோடு தன்னு லியன்றவரை ஆரம்பக்கல்வி அபிவிர்த்திக்காகப் பாடுபடுவதாகவும் உறுதி கூறினர். டிப்டி இன்ஸ்பெக்டரவர்கள் அப்போதைக் கப்போது ஏற்படும் சந்தேகங்களை நிவர்த்தி செய்தனர். தனவணிக வகுப்பைச் சார்ந்த கோ. அழகாபுரி மானேஜர் திரு. CT. A. CT. நாச்சியப்ப செட்டியாரவர்கள் ஆரம்ப முதல் இறுதிவரை இக்கூட்டத்தில் கலந்து கொண்டமைக்கு இச்சங்கம் மிகப் போற்றுகிறது. வந்தனோபசாரத்திற்குப் பின் தேசிய கீதத்துடன் கூட்டம் இனிது கலைந்தது.





## ஹரிஜனப் பிள்ளைகள் கல்வி

ஹரிஜனங்களுக்கு இருக்கும் பலவித சங்கடங்களில் அறியாமை ஒன்று. அதைப்போக்க, ஆங்காங்கு இருக்கும் ஹரிஜன சங்கங்கள் கவனித்து வரும் என்று எண்ணி இருந்தோம். ஆனுல் சமீபத்தில் காரைக்குடி ஹரிஜன சங்கத்தார் இவ்வருடம் ஹைஸ்கூலில் படித்துக் கொண்டிருந்த பல ஹரிஜன மாணவர்களுக்குப் புத்தகங்கள் வாங்கிக் கொடுக்கவும், பள்ளிக்கூட சம்பளம் கொடுக்கவும் மறுத்துவிட்டதாகத் தெரிகிறது. அதனுல் நன்ருய்ப் படித்துக்கொண்டிருந்த பையன்கள், வீணுகப் படிப்பை விடவேண்டி வந்திருக்கிறது. இவ்வளவு நாள் பிள்ளைகளைப் படிக்க உதவி செய்தவர்கள், இப்பொழுது சர்க்காருக்கு எழுதி, அவர்களின் உதவியைப் பெறும்படி செய்வதைவிட்டு, தாங்கள் செலவழித்த பணம் வீண்போக, நடுவில் மறுப்பது மிகவும் அறியாமை ஆகும். இல்லாவிட்டால் காங்கிரஸ் கமிட்டிகளுக்கு எழுதியாவது ஹரிஜன படிப்புநிதி என்று ஏற்படுத்தி இந்தப் பையன்கள் படிப்பை விருத்திசெய்ய வேண்டுவது கடமை ஆகும். ஆகையால் இதைப் பற்றி காலதாமதம் செய்யாமல் ஹரிஜன சங்கத்தார் ஏற்பாடு செய்வார்களென்று நம்புகிறேன்.

தி. நாராயணன்.

## தமிழர் நாகரீகம்

(நமது நிருபர்)

சிவகங்கை ராஜா உயர்தரக் கலாசாலையில் 26-8-38உ மாலை 4 மணிக்கு அண்ணுமலைப் பல்கலைக்கழகத் தமிழ் பேராசிரியர் ஸ்ரீ ந. மு. வெங்கடசாமி நாட்டாரவர்கள் "தமிழர் நாகரீகம்" என்னும் விஷயம்பற்றி உணர்ச்சி ததும்பசொற்பொழி வாற்றினர்கள்

## காரைக்குடி ஜில்லா அரசியல் மகாநாடு

காரைக்குடி ஜில்லா 3-வது அரசியல் மகாநாட்டின் கன்வீனர் மானுமதுரை ஸ்ரீ ஆர். ஷண்முகம் பின் வருமாறு எழுதுகிறார்:—

25—9—38 ஞாயிற்றுக்கிழமையன்று காரைக்குடி ஜில்லா அரசியல்மகாநாட்டை மானுமதுரையில் நடத்துவதாகத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. ஜில்லா மகாநாடு என்ற காரணத்தால் இம்மகாநாட்டுக்குப் பொறுப்பும் பெருமையும் அதிகமுண்டு. எனவே இந்த மகாநாட்டை உற்சாகமாகவும் சிறந்த முறையிலும் நடத்தி வைப்பது ஜில்லா வாசிகளாகிய நம்முடைய கடமையாகும்.

மானுமதுரைத் தாலூகாவைச் சேர்ந்த காங்கிரஸ் அங்கத்தினர்கள் ஏராளமாக வரவேற்புக் கமிட்டி அங்கத்தினர்களாகச் சேர்ந்தும் பொருளுதவி செய்தும் மகாநாட்டைச் சிறப்புறச் செய்யும்படி வேண்டுகிறேன்.

நமது ஜில்லாவிலுள்ள காங்கிரஸ் அபிமானிகள் அனைவரும் தாராளமாக நன்கொடை அளித்தும் பூரணமாக ஒத்துழைத்தும் மகாநாடு வெற்றிகரமாக நடைபெற உதவும்படி வேண்டுகிறேன்.

வரவேற்புக் கமிட்டி அங்கத்தினர் கட்டணம் ரூ. 2 ஆகத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. நேரிலோ தபால் மூலமோ என்னிடம் பணம் செலுத்தி ரசீது பெற்றுக் கொள்ளலாம்.



# வடக்கு இராமனுதபுரம் ஜில்லா போர்டுக் கூட்டம்

## தரையிலமர்ந்து நடத்தினர்

### தலைவர்மீது கண்டனத் தீர்மானம் ரத்து

(நமது நிருபர்)

சிவகெங்கை லோக்கல் போர்டு அஸிஸ்டெண்டு இஞ்சினியர் ஆபீஸ் கட்டிடத்தில் 27—8—38உ மாலை 3மணிக்கு வடக்கு இராமனுதபுரம் ஜில்லாபோர்டின் சாதாரணக் கூட்டம் டி ஆபீஸ் ஹாலில் தலைவர் ஸ்ரீ வி. வி. விடி. வெங்கடாசலம் செட்டியாரவர்கள் தலைமையில் கூடியது. 15 அங்கத்தினர்கள் வந்திருந்தார்கள். கடந்த கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்டபடி அங்கத்தினர்கள் ஜமக்காளத்தில் அமர்ந்திருந்தனர். அவர்களெதிரில் சிறிய மேஜைகள் வைக்கப்பட்டிருந்தன. தலைவர் திண்டில் அமர்ந்திருந்தார். அவருக்கு பிரத்தியேகமாக தலையணைகளும் கொடுக்கப்பட்டிருந்தன. மெம்பர் ஸ்ரீ கருமுத்து சிவலிங்கம் செட்டியார், ஸ்ரீ பி. நா. சொக்கலிங்கம் செட்டியார் ஆகியவர்களிடமிருந்து வரலான கேள்விகளும் அவைகட்கு விடைகளும் வாசிக்கப்பட்டன.

**அநுதாபத் தீர்மானம்**

கூட்டம் ஆரம்பிக்கு முன் தலைவரவர்களால் சமீபத்தில் நடந்த கோரமான ரயில் விபத்தில் இறந்தவர்களுக்காகவும், ஸ்ரீ ராஜாராவ், எம். எல். ஏ., அவர்கள் மரணத்திற்காகவும் இந்த போர்டார் அநுதாபம் காட்டவேண்டுமெனக் கொண்டுவந்த பிரேபணைப்படி அனைவரும் எழுந்து நின்று தங்களுடைய அனுதாபத்தைத் தெரிவித்தார்கள்.

**வரவேற்பு**

காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ சுபாஷ் சந்திர போஸ் அவர்கள் இந்த ஜில்லா போர்டு எல்கைக்கு அக்டோபர்-௴ வருங்காலத்தில் ஜில்லாபோர்டார் வரவேற்கவேண்டியதென ஏகமனதாய் தீர்மானிக்கப்பட்டது

**டாக்டர்களை மாற்ற**

ஜில்லா போர்டிலுள்ள எல்லா டாக்டர்களையும் ஒவ்வொரு ஊரிலும் 2 வருஷ காலத்திற்குமேல் வைத்திருக்காமல் மாற்ற வேணுமாய் ஏகமனதாக தீர்மானிக்கப்பட்டது.

**கோழிப் பண்ணைக்கு கோவிந்தா**

சிவகெங்கை போர்டு கைத்தொழில் பாடசாலையில் வைத்துப் பராமரித்து வரும் கோழி முதலியவைகளை பள்ளிக்கூடத்திலிருந்து எடுத்துவிட வேணுமென்று தீர்மானிக்கப்பட்டது.

**புதிய ஆஸ்பத்திரி**

திருவாடானைத் தாலுகா மங்கலக்குடி கிராமத்தில் 917 ஜனத்தொகை இருப்பதால் அந்த ஊரிலேயே ஒரு கிராம ஆஸ்பத்திரி ஏற்படுத்துவதென்று ஏகமனதாய் தீர்மானிக்கப்பட்டது.

**தென்னை மரத்தை வெட்ட**

காரைக்குடி—கோவிலூர் ரோட்டிலிருக்கும் தென்னை மரங்களை வெட்டிவிடுவதென்றும் எலக்டிரிக் கம்பங்களை நகர்த்த வேண்டாமென்றும் தீர்மானிக்கப்பட்டது.

**ஏரியூருக்கு ரோடு**

அலவாக்கோட்டையிலிருந்து ஏரியூருக்கு ஒரு ரோடு போட ரூ. 3000 சாங்கிஷன் செய்யப்பட்டது.

**ஆரம்பக்கல்வி**

நமது ஜில்லா விஸ்தீரணத்துக்குள் சேர்ந்த மானேஜ்மெண்டில் நடக்கும் பள்ளிக்கூடங்களை மானேஜ்மெண்டு பார்ப்பவர்கள் ஒரு வருஷத்துக்குச் செலவாகும் பணத்தைப் போர்டாருக்குத் தருவதற்கு சம்மதித்து போர்டார் கண்டிஷனுக்கு இணங்கி ஒப்புவிக்கும் பள்ளிக்கூடங்களை போர்டார் செலவாகும் பணத்தை வாங்கிகொண்டு ஒப்புக்கொள்வதென தீர்மானிக்கப்பட்டது.

**குழந்தைகட்கு ஆசனப்பலகை!**

மெம்பர் ஸ்ரீ கருமுத்து சிவலிங்கம் செட்டியாரவர்களால் கொண்டுவரப்பட்ட "போர்டு பாடசாலைகளுக்கு பிள்ளைகள் இருப்பதற்குப் பெஞ்சுகள் சப்ளைசெய்வதற்குப் பதிலாக நீளஆசனப்பலகைகளையே கொடுப்ப"தென்று வந்த தீர்மானத்தை மெம்பர் ஸ்ரீ பி. நா. சொக்கலிங்கம் செட்டியார் அவர்களால் "இனிமேல் புதிதாக வாங்க வேண்டிய ஆசனப் பலகைகள்" என்றுதிருத்த வேண்டுமென்ருர். திருத்தத்துடன் சாங்கிஷன் செய்யப்பட்டது.

**வார்தா திட்டம்**

திருப்புவனம் போர்டு ஹையர் எலிமெண்டரி ஸ்கூலில் காய்கறித்தோட்டம் பழத்தோட்டம் ஏற்படுத்தி வார்தா திட்டத்தை பரீட்சார்த்தமாக செய்யலாமென்று தீர்மானிக்கப்பட்டது.





## காங்கிரஸ் நிர்வாகிகள் மகாநாடு

நிகழும் ஆவணி௴ 19உ (4-9-38) ஞாயிற்றுக்கிழமை காலை 9-மணிக்கு சென்னை அரசாங்க விவசாய இலாகா பார்லிமெண்டரி காரியதரிசி ஸ்ரீமான் என். எஸ். வரதாச்சாரியார் அவர்கள் தலைமையில் திருப்பத்தூர் தாலூகா காங்கிரஸ் நிர்வாகஸ்தர்கள் மகாநாடு, பிள்ளையார் பட்டியில் நடைபெறும். மகாநாட்டில், காங்கிரஸ் நிர்மாண வேலைகளை திருப்புத்தூர் தாலூகா பூராவிலும் வேலை செய்வதற்கு, திட்டம் வகுப்பதுபற்றி ஆலோசிக்கப்படும்.

அவ்வமயம், மதுரை ஜில்லாபோர்டு அங்கத்தினர் ஸ்ரீமதி எஸ். தாயம்மாள் அவர்கள் தேசியக்கொடி ஏற்றுவார். ஸ்ரீமான் கரு. முத்து. சிவலிங்கம் செட்டியாரவர்கள் மகாநாட்டைத் திறந்துவைப்பார். டாக்டர் எஸ். சுப்பிரமணியம் அவர்கள் ராஷ்டிரபதி சுபாஷ் சந்திரபோஸின் படத்தைத் திறந்துவைப்பார்.

## ரேடியோ

சமீபத்திலேயே குறைந்த விலையில் ரேடியோ செட்டுகள் கிடைப்பதற்காகச் சென்னை சர்க்கார் முயன்றுவருவதாகத் தெரிகிறது ரூ. 80 விலையில் இவை கிடைக்குமென்று தெரிகிறது. சில முக்கிய பாகங்களை வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்து செட்டுகளை இங்கேயே தயார் செய்வார்களென்றும் தெரிகிறது. இவ்விஷயம் சமீபத்தில் நடைபெறவிருக்கும் தொழில் மந்திரிகள் மகாநாட்டில் விவாதிக்கப்படும்.

**டிக்கட் விற்பனை**

இந்த போர்டின் உத்தியோகஸ்தர்களையும் வேலைக்காரர்களையும் தருமத்திற்காக நடத்தப்படும் டிராமா முதலியவைகளுக்கு டிக்கட்டுகள் விற்பனை செய்யவோ அல்லது பணம் வசூல்செய்யவோ சொல்லக்கூடாது என்று தீர்மானிக்கப்பட்டது.

**கண்டனத் தீர்மானம் ரத்து**

இந்த ஜில்லாபோர்டு காரியதரிசி நியமன விஷயத்தில் ஜில்லா போர்டு தலைவரவர்கள் சரியானபடி நடந்துகொள்ளவில்லையென்பதற்காக தலைவரவர்களை கண்டித்த 28-5-38 தேதிய 170ம் நிம்பர் ஜில்லா போர்டு தீர்மானத்தை ஏன் ரத்து செய்யக்கூடாதென்பதற்கு இந்த உத்தரவு கிடைத்த ஒரு மாதத்துக்குள் காரணம் காட்டும்படி வடக்கு இராமநாதபுரம் ஜில்லாபோர்டுக்கு நோட்டீஸ் கொடுத்த கவர்ன்மெண்டு உத்தரவின் மீது சிறிது விவாதம் நடந்தது. பிறகு கண்டனத் தீர்மானம் ரத்து செய்யப்பட்டது.

**வண்டிக்கு வழி**

சதுர்வேதமங்கலத்திலிருந்து பிரான்மலைக்குப் போகிற 3-மைல் நீளமுள்ள ரோட்டையும் 2-மைல் நீளமுள்ள வண்டிப் பாதையையும் அஞ்சுகோயில் தேவஸ்தானத்திலிருந்து பெற்றுக்கொண்டு பிரான்மலைக்கு வண்டிகள் போவதற்கு லாயக்காக திருப்பத்தூர் சிங்கம்புணரி ரோட்டில் இவ்வருடத்திய பரிபாலன வேலையின் டெண்டர் சேவிங்க்ஸிலிருந்து ரிப்பேர் செய்வதென்று தீர்மானிக்கப்பட்டது.

**குழாய்க் கிணறு**

கீழப்பூங்குடி கிராமத்தில் இரண்டு குப்பை கூட்டிகள் நியமிக்கவும் ஒரு மருத்துவச்சி ஏற்படுத்தவும் குடிதண்ணீருக்காக இரண்டு குழாய்க் கிணறுகள் ஏற்படுத்த வேணுமாயும் தீர்மானிக்கப்பட்டது.

இரவு 8-மணிக்கு கூட்டம் முடிவடைந்தது.



Bleed through.

Printed & Published by S. MURUGAPPA for Dhana Vyrian Company Ltd., at the Kumaran Power Press, Karaikudi.(S. INDIA)

